9th August 1960] [Mr. Speaker]

setting up a bad precedent. If I have to give the reason for every amendment ruled out of order, I will have to take up the whole time of the House only for giving reasons.

Sri M. KALYANASUNDARAM : If hon. Members know the reasons, there will be no repetition of such a mistake.

Mr. SPEAKER : Every hon. Member is supposed to know the Rules thoroughly.

Sri N. K. PALANISAMI : Sir, I have also given notice of an important amendment and that has not been circulated.

Mr. SPEAKER : For the same reason, I would have ruled it out of order.

According to the agreement reached yesterday, the Leader of one Party will speak to-day. Now the hon. Member, Sri Pakkirisami Pillai will speak. I allow 20 minutes for him.

### VIII.—POINT OF INFORMATION *RE*: ATTENDANCE OF A MEMBER IN COURT.

Sri A. V. P. ASAITHAMBI : On a point of information, Sir. இன்றைக்கு கவர்னர் உரைமீது பேசுவதற்கு என் பெயரும் எங்கள் கட்சியிலிருந்து கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆனால், இன்று ஒரு வழக்கு இருக்கிறது, இந்த அமைச்சர்களை நான் அவதூறாகப் பேசினேன் என்பது சம்பந்தமாக. ஆகவே அந்த வழக்குக்குப் போக வேண்டியிருக்கிறது; இங்கேயும் பேச வேண்டியிருக்கிறது. அங்கே போவதானால், இங்கே பேச முடியாது.

Mr. SPEAKER : அப்படியானால் நீங்கள் நாளைக்கு இங்கே பேசுங்கள்.

Sri A. V. P. ASAITHAMBI : முன்பு கனம் ரஷீத் விஷயத்தில் அவர்கள் கோர்ட்டுக்குப் போகவேண்டியதில்லை என்று தாங்கள் சொல்லியிருக்கிறீர்கள்.

Mr. SPEAKER : நான் சொல்லவில்லை. சபையைக் கேட்டேன், சபை அப்படித் தீர்மானித்தது. அதோடு, தங்கள் பேரில் இன்று இருப்பது க்ரிமினல் கேஸ் என்று நினைக்கிறேன். க்ரிமினல் கேஸுக்குப் ப்ரையாரிடி கொடுக்கவேண்டும்; ஆகையினால், தாங்கள் இன்றைக்கு கோர்ட்டுக்குப் போங்கள், நாளைக்கு இங்கே வாருங்கள். (சிரிப்பு.) நாளைக்கு நீங்கள் பேசலாம். இன்று இங்கே பேசுவதற்கு தயவுசெய்து கனம் கோவிந்தசாமியை வேறு பெயர் கொடுக்கச் சொல்கிறேன். (சிரிப்பு.)

### VII.—DISCUSSION ON THE GOVERNOR'S ADDRESS—*cont.*

* Sri S. PAKKIRISAMI PILLAI : கனம் தலைவர் அவர்களே, மேன்மை தங்கிய கவர்னர் அவர்களுடைய பிரசங்கம் நல்ல உயர்ந்த லட்சியத்தைக் கொண்டு ரொம்ப அழகாக இருந்திருக்கிறது. சமீபத்தில் நடைபெற்ற, அண்மையில் நடைபெறப்

போகின்ற, சம்பவங்களை எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். இதிலே முதல் இடம் இந்த மத்திய சர்க்கார் சிப்பந்திகள் சம்பத்தில் வேலை நிறுத்தம் செய்தார்களே, அந்த வேலை நிறுத்தம் எப்படிக் கொஞ்ச நாட்களில், அடக்கப்பட்டு, ஒடுக்கப்பட்டுவிட்டது என்பதைப் பற்றி. அதற்குக் காரணம், போலீசார் திறமை, போலீசாருடைய நடவடிக்கை, போலீசார் எடுத்துக்கொண்ட ஒரு தீவிர செயல் முறை என்று இவைகளைக் குறிப்பிட்டு அவர்களுக்கு ஒரு பாராட்டுதல் சொல்லி, அந்த மத்திய சர்க்கார் சிப்பந்திகள் வேலை நிறுத்தம் முடிவடைந்ததுபற்றி கவர்னர் பெருமான் மகிழ்ச்சியுடன்கூடிய திருப்தியை எடுத்துக் கூறியிருக்கிறார்கள். உண்மையிலேயே அந்தமாதிரியான திருப்தி எல்லாருக்கும் அதிக சம்பளம் வாங்குகிறவர்கள், பெரிய பணக்காரர்கள் அத்தனை பேர்களுக்கும் மகிழ்ச்சி அளித்திருக்கும்; ஆனால், ஏழை, எளியவர்கள் அம்மாதிரி அடக்கப்பட்டார்கள் என்பதில் சந்தோஷம் அடைந்தார்கள் என்று சொல்லமுடியாது. சாதாரணமாக, அந்தமாதிரி, சிப்பந்திகளுக்கு என ஒரு தொழில் சங்கத்தின் நடவடிக்கைகளுக்கு முதலில் இடம் கொடுத்துவிட்டு, தொழில் சங்கத்தை ரிஜிஸ்டர் செய்து, தொழில் சங்க விதிகள் பிரகாரம் அவர்கள் நடவடிக்கை எடுக்கும்போது, கடைசியில் தடை செய்வது நம் இந்திய சர்க்காருக்குப் பழக்கமாக ஆகிவிட்டது.

ஆயிரக் கணக்கான தொழிலாளர்கள் குறைந்த சம்பளம் வாங்கிக்கொண்டு தங்களுடைய வாழ்க்கைத் தரத்தைச் சரிக்கட்டுவதற்கு முடியாமல் கஷ்டப்பட்டுக்கொண்டிருப்பதின் காரணமாக அவர்கள் ஊதியம் அதிகம் வேண்டும் என்று கேட்டார்கள். ஆனால் அதற்கு எதிரிடையாக சர்க்காரிடம் வேலை செய்யும் கொழுத்த சம்பளம் வாங்குகிற பெரிய அதிகாரிகள், மந்திரிகள் முதலானவர்கள் (குறுக்கீடு: மந்திரிகளும்தான் பொது மக்களின் பணத்திலிருந்து சம்பளம் வாங்குகிறார்கள்) சேர்ந்து அதை அடக்கிவிட்டார்கள். ஆகவே கொழுத்த சம்பளம் வாங்குகிறவர்களுக்கும் அவர்கள் கீழே வேலை செய்யக்கூடிய குறைந்த சம்பளம் வாங்கக்கூடியவர்களுக்கும் இடையேதான் இந்தப் போராட்டம் நடைபெற்றது என்று சொல்லவேண்டும். நாம் எதிர்பார்த்த விதம் அந்தப் போராட்டத்தை அவர்கள் அடக்கி விட்டார்கள். அவ்வளவு பேர்களுக்கும் பல்வேறு வழிகளில் பல தொந்தரவுகளைக் கொடுத்தார்கள். போலீசார்களுடைய உதவியால் போராட்டத்தை நடத்தியவர்கள் ஒடுக்கப்பட்டார்கள். அப்படித் தடுத்து நிறுத்திவிட்டோம் என்றும் நமது கவர்னர் திருப்தியுடன் சொல்லியிருக்கிறார். தொழில் சங்கச் சட்டத்தின் மூலம் கொடுக்கப்பட்ட உரிமையை மத்திய அரசாங்க அதிகாரத்தில் இருந்துவரும் ஜனாதிபதி அவர்கள் தனக்கு இருக்கும்படியான விசேஷ அதிகாரத்தை வைத்துக்கொண்டு சிவில் ரைட்ஸை க்ருமினல் அபென்ஸாக மாற்றி அந்த முறையில் ஒரு சட்டத்தைக் கொண்டுவந்திருக்கிறார். இப்படிப்பட்ட க்ருமினல் அபென்ஸின் கீழ் இப்பொழுது போலீஸ் அதிகாரிகளுக்கு அந்தந்த ராஜ்யங்களில் அதிகப்படியான அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. போலீஸ் இலாகாவில் உள்ள கீழ்த்தர சிப்பந்திகளுக்கும் இப்படிப்

9th August 1960] [Sri S. Pakkirisami Pillai]

பட்ட அதிகாரங்கள் கொடுக்கப்பட்டன. இப்படிப்பட்ட முழு அதிகாரத்தை அவர்களுக்குக் கொடுப்பது என்பது அவ்வளவு நல்லது அல்ல. அதனால் தொழிலாளர்கள் படக்கூடிய அவதி சொல்லி முடியாது. எனக்குத் தெரிந்த வரையில் பெரம்பூர் வொர்க்ஷாப்பில் உள்ளே நுழைந்து வேலை செய்யச் சென்றவர்களை யெல்லாம் தடி கொண்டு தாக்கி அவர்களில் அநேகரை லாரியில் ஏற்றிக்கொண்டு போய் ஜெயிலில் போட்டு விட்டார்கள். மேலும் வெளியில் சென்றவர்களைக்கூட வழியில் மடக்கி ஒரு பக்கம் லாரி இன்னொரு பக்கம் போலீஸ் கார் இப்படி வைத்துக்கொண்டு அவர்களையெல்லாம் பிடித்துக்கொண்டு லாரியில் போட்டுக் கொண்டுபோய் ஜெயிலில் அடைத்து விட்டார்கள். உள்ளே சென்றால்கூட அங்கே இருக்கக்கூடிய ஒரு சங்கத் தலைவரும் அல்லது அந்த சங்கத்தைச் சேர்ந்தவர்களும் மற்ற சங்கத்தைச் சேர்ந்தவர்களைக் காட்டிக்கொடுத்து போலீஸார் வசம் ஒப்படைத்தார்கள். இப்படி போலீஸில் ஒப்படைக்கப்பட்டவர்கள் போலீஸாரால் பலவித இம்சைக்குள்ளாக்கப்பட்டனர். கடந்த 11, 12, 13-ம் தேதிகளில், ஆக இந்த மூன்று நாட்களிலும், அங்கு நடந்த போலீஸ் அட்டகாசமும், போலீஸ் தர்பாரும் சொல்லி முடியாது. தெருவில் போனவர்களையும் வீட்டின் முன்னிருந்தவர்களையும் பிடித்துப்போய் ஜெயிலில் போட்டார்கள். இதை நாங்கள் பார்த்தோம். இம்மாதிரியான அக்கிரமம் அங்கே நடைபெற்றது. இதற்கு வேறு காரணம், அங்கு போலீஸ் கீழ் அதிகாரிகளுக்கு முழு அதிகாரமும் கொடுத்ததுதான். பெரிய அதிகாரிகள் செய்ததாகத் தெரியவில்லை. சிறிய அதிகாரிகள்தான் செய்தார்கள். சப்-இன்ஸ்பெக்டர் முதலானவர்களுக்கு அதிகப்படியான அதிகாரத்தைக் கொடுத்ததன் பயன்தான் இது. அவர்களுக்கு இப்படிப் பட்ட முழு அதிகாரத்தைக் கொடுத்ததினால் அவர்களுக்கு ஆகாதவர்களையெல்லாம் பிடித்து அங்கே அடித்திருக்கிறார்கள். அத்துடன் ஜெயிலிலும் போட்டிருக்கிறார்கள். இம்மாதிரியான ஒரு அக்கிரமும் அங்கே நடைபெற்றிருக்கிறது. இந்த அக்கிரமச் செயல்களைப்பற்றி பரிசீலனை செய்ய ஒரு பகிரங்க விசாரணை நடத்த வேண்டும். அங்கு போலீஸார் நடத்திய அக்கிரமத்தைக் கண்டிக்கக்கூடிய வகையில் பகிரங்க விசாரணை நடத்தவேண்டியது அவசியமாக இருக்கிறது. அப்படி நடத்தி அப்படி அவர்கள் அக்கிரமம் செய்திருக்கிறார்களா என்று கண்டு பிடித்து அவர்களுக்குக் கண்டிப்பாக இந்த அரசாங்கம் தண்டனை கொடுக்க வேண்டும். தண்டனை கொடுக்கும்போது கடுமையான தண்டனையும் கொடுக்கவேண்டும். ஆகவே ஒரு பகிரங்க விசாரணை நடப்பதற்கு வழிவகை காண வேண்டும் என்று இந்தச் சந்தர்ப்பத்தில் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

போலீஸார் அக்கிரமம் செய்தது ஒரு பக்கம் இருக்க, தேசத் தலைவர்கள் பேச்சு நடைமுறையில் நியாயமாகப் போனாலும்கூட அவர்களுக்குக் கீழ் இருக்கும்படியான அதிகாரிகள் இன்னும் மனதில் இரக்கம் காணும்படியான நிலையில் நடந்து கொள்ளவில்லை. சில அதிகாரிகள், தொழில் சங்கத்தைச் சேர்ந்த வர்கள் பலரை "சஸ்பெண்ட்" செய்திருக்கிறார்கள். பலர் மீது

[Sri S. Pakkirisami Pillai] [9th August 1960

கோர்ட்டு நடவடிக்கைகூட எடுத்திருக்கிறார்கள். சங்கம் என்று ஒன்று வைத்துக்கொண்டு அதன் மூலமாக தங்களுடைய உரிமைக்கு என்று வேலை செய்யும்போது தடுக்கப்படுகிறது. அவர்கள்மீது நடவடிக்கை எடுக்கப்படுகிறது. சாதாரணமாக இப்படிப்பட்ட நடவடிக்கைகள் ஜனநாயக நாட்டில் நடைபெறக் கூடியதாக இல்லை. தொழில் சங்கச் சட்டத்தில் வேலை நிறுத்தம் செய்வதற்கு அனுமதிக்கப்பட்டிருக்கிறது. அப்படி இருந்தும் வேலை நிறுத்தம் செய்வது கூடாது என்று சொல்வது சரியல்ல. அதிலும் முதலில் அந்த விதமான ஒரு உரிமையைக் கொடுத்து விட்டு அதற்கு வேண்டிய எல்லாவிதமான ஏற்பாடுகளையும் செய்து விட்டு கடைசியில் அதைக் தடைசெய்வது என்பது நியாயமா காது. இப்படிக் கடைசியில் வேலை நிறுத்தம் செய்யக்கூடாது என்று போலீஸார்களைக்கொண்டு அடக்குவது என்பது ஜனநாயக நாட்டிற்கு உக்க பண்பு அல்ல. இதைவிட அக்கிரமமான செயல் வேறு கிடையாது. இந்த நிலையில்தான் விஜேபாஜி அவர்கள் அரசாங்கம் போலி கௌரவத்தை கடைபிடிக்கிறார்கள் என சொல்லியதைக்கூட கவனத்திற்குக் கொண்டுவருகிறேன். மத்திய அரசாங்கமே ஒரு கமிஷனுக்கு ஏற்பாடு செய்தார்கள். அந்தக் கமிஷன் சிலவற்றை சிபாரிசு செய்தது. அந்தச் சிபாரிசு முழுவதையும் அங்கீகாரம் செய்தார்கள். அதன் பிறகு அதை ஏன் அமலுக்குக் கொண்டு வரவில்லை? இப்படி அமலுக்குக் கொண்டு வரமுடியாவிட்டால் கமிஷனை நியமிக்க வேண்டிய அவசியம் என்ன? அதேமாதிரி பஞ்சாலை தொழிலாளர்கள். அவர்களுடைய வாழ்க்கைத் தரத்தை சரிக்கட்டும் வகையில் ஒரு "வேஜ் போர்ட்" நியமிக்கப்பட்டு அந்த "வேஜ் போர்ட்" விசாரணைக்குப் பின்னர் தங்களுடைய சிபாரிசையும் தெரியப்படுத்தியது. தென்னிந்திய மில் முதலாளிகள் அதை ஏற்றுக்கொள்ள முன்வரவில்லை. நமது தொழில் சங்கப் பிரதிநிதிகள் அதற்கு எடுத்துக்கொண்ட பெரும் முயற்சியின் விளைவாக பல்வேறு கட்சிப்பிரதிநிதிகளும் இருதரப் பாரும் பேச்சு வார்த்தைகளை நடத்தி ஒரு முடிவுக்கு வரவில்லை. அதன் பிறகு நமது ராஜ்ய தொழில் அமைச்சர் அவர்கள் தன்னுடைய சொந்த முயற்சியினால் வெகு சூசகமாக நல்ல வழியில் ஒரு முடிவைக் காணும்படி நேர்ந்தது. ஆனால் எற்கனவே மில் முதலாளிகள் அங்கே எவ்வளவு அதிக பட்சமாக கொடுக்கப் படும் என்று நினைத்திருந்தார்களோ அந்தத் தீர்ப்பைத்தான் அமைச்சர் அவர்களும் வற்புறுத்தினார்கள். அதற்கு மேல் அந்த சம்பளக் கமிஷன் திட்டம் எவ்வளவு கொடுக்கவேண்டும் என்று கணக்குப் பார்க்கும்படியான சந்தர்ப்பம் இல்லாமல் போய் விட்டது. அநேக மில் முதலாளிகள் அதை ஒத்துக்கொண்டு கையெழுத்தும் போட்டார்கள். ஆனால் ஒரு மில் முதலாளி மட்டும் ஒத்துக் கொள்ளவில்லை. பி. அண்ட். சி. மில் முதலாளி அதை எதிர்க்க ஆரம்பித்தார். அதற்கு அவர்கள் என்ன காரணம் சொன்னார்கள் என்றால் தாங்கள் தொழிலாளர்களுக்கு அதிகப் படியான சலுகைகள் கொடுக்கிறோம் என்றும் வருஷத்திற்கு ஒரு சத விகிதம் சம்பள உயர்வு கொடுக்கிறோம் என்றும், ப்ரொடக்ஷன் அலவன்ஸ் கொடுக்கிறோம் என்றெல்லாம் சொல்லி வாதத்தைக்

9th August 1960] [Sri S. Pakkirisami Pillai]

ிளப்ப ஆரம்பித்தார்கள். இப்படிப்பட்ட எதிர் கோரிக்கைகளை தொழிலாளர்களுக்கு எதிராக அரசாங்கத்தின் முன் போட்டார்கள்.

இந்த எதிர் கோரிக்கைகளை அரசாங்கத்தார் அனுமதித்து அதன் பேரில் பேச்சு வார்த்தை நடத்தியது சரியல்ல. அதை அவர்கள் முன்னாலேயே ஒத்துக்கொள்ளாமல் அவர்களை மற்றவர்களுடன் ஒத்துக்கொள்வதற்கு வற்புறுத்தியிருந்திருப்பார்களேயானால், அதற்குப் பின்னால் நிகழ்ந்த பல்வேறு நிகழ்ச்சிகள் அங்கே நடந்தே இருக்காது. ஏற்கனவே பல தொழிற்சங்கப் பிரதிநிதிகள் ஏற்றுக் கொண்டதன் பிரகாரம் வேலை நிறுத்த நோட்டீஸ் கொடுக்கப்பட்டது. அந்தத் தேதிப் பிரகாரம் வேலை நிறுத்தம் செய்த பிற்பாடு அரசாங்கத்தார் அந்தமாதிரி வேலை நிறுத்தம் செய்வதுமீது நல்லது அல்ல என்று அபிப்பிராயப்பட்டார்கள். அரசாங்கத்தாரின் மனப்போக்கைப் பார்த்து வேலை நிறுத்தம் உடனே வாபஸ் பெறப்பட்டது. அவ்வாறு வாபஸ் வாங்கினவுடன் மில் முதலாளிகள் நோட்டீஸ் போட்டு ஏன் வேலை நிறுத்தம் செய்தவர்களுடைய சம்பளத்தை ஆறு நாட்களுக்குப் பிடிக்கக்கூடாது என்று பயமுறுத்த முற்பட்டனர். அதற்கப்புறம் திரும்பவும் வேலை நிறுத்தம், திரும்பவும் வாபஸ் என்று ஏற்பட்டது. இன்னும் ஒருவித சமரச முடிவும் நல்லவகையில் ஏற்படவில்லை. இன்னும் எத்தனை காலம் அதற்கு ஆகுமோ? அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுக்குமோ? கொழுத்த பி. அண்டு ஸி. மில் முதலாளிகள் பணத்தைச் சுரண்டிக்கொண்டிருக்கிறார்கள். பணத்தின் ஆசை நாளுக்கு நாள் அதிகரித்து வருகிறது. ஓரளவு கொஞ்சம் வாழ்க்கைத்தரத்தை உயர்த்திக் கொள்ளலாம் என்று தொழிலாளர்கள் ஆசைப்பட்டால் அவர்கள் நசுக்கப்படுகிறார்கள். ஓரளவு தொழிலாளர்கள் பக்கம் அரசாங்கத்தார் இருந்து அவர்களுக்கு நல்லவழியில் உதவி செய்ய வேண்டுமென்று இந்தச் சந்தர்ப்பத்தில் கேட்டுக்கொள்கிறேன். 10-00 a.m.

நமது தொழில் அமைச்சர் அவர்கள் இன்னொரு நல்ல காரியத்தைச் சமீபத்தில் செய்துவிட்டிருக்கிறார்கள். பீடி முதலாளிகளுடைய ஒரு அக்கிரமத்தை, ஆணவத்தை, அடக்கி ஒருமாதிரியாக அவர்களையும் சட்டத்தின் விதிகளுக்கு இணங்கும் படியாகச் செய்திருக்கிறார்கள். அவர்கள் இதுவரையில் சட்டத்திலிருந்து தப்பிக்கொள்வதற்கு என்னென்ன தந்திர உபாயங்களை எல்லாம் அனுஷ்டிக்க முடியுமோ அவ்வளவையும் அனுஷ்டித்து வந்தார்கள். ஆனால் கடைசியில் இப்போது குறைந்தபட்ச சம்பளத்தையாவது ஒப்புக்கொள்ளும்படியான நிலைமைக்கு அவர்களை உட்படுத்தியிருப்பதைக் கண்டு தொழில் அமைச்சர் அவர்களைப் பாராட்டாமல் இருக்க முடியாது.

நம் நாட்டில் பீடித் தொழில் மிகவும் ஏழைகள் செய்யும் படியான தொழில். பட்டினியைப் போக்கிக்கொள்ள பணம் வாங்கும்படியான நிலைமையில் இருந்து கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கு என்ன வகையில் தீர்வு காணமுடியுமோ அந்த வகையில் தீர்வுகாணும்படியாகக் கேட்டுக்கொள்கிறேன்.

[Sri S. Pakkirisami Pillai] [9th August 1960

தவிர லேபர் டிபார்ட்மெண்ட் போதுமான அளவுக்குத் திருப்தி கரமான அளவில் வேலை செய்யவில்லை என்பது என் கருத்து. உதாரணமாக லேபர் ஆபீசர் நம்பர் 1. அவரை மாற்றி இன்னொரு வரைப் போடாத காரணத்தினுல் தொழில் சச்சரவுகள் அதிகமாக தீர்வுகாணமுடியாமல் இருந்துகொண்டிருக்கின்றன. அவற்றுக்கு நல்ல முடிவு காண சீக்கிரத்தில் வழிவகை செய்தாக வேண்டும். அதற்கு என்னென்ன நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டுமோ அவற்றையெல்லாம் எடுத்துக் கொண்டாகவேண்டும்.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே பல்வேறு வழிகளில் திட்டங்களைப் போட்டு அபிவிருத்தி செய்திருக்கிறார்கள். பல கோடிக்கணக்கான ரூபாய்களை அதில் செலவு செய்திருக்கிறார்கள். அப்படிச் செலவழித்திருப்பதற்குப் பயன் எந்த வழியில் கிடைத் திருக்கிறது என்பதைப் புள்ளி விவரங்களுடன் இன்னும் கொடுக்கவில்லை. இப்போது மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் வருகிறது. அதில் தொழிலாளர்களுக்கு உண்டான ஒரு நல்ல வசதி வாய்ப்புகளுக்குண்டான திட்டங்கள் ஏதும் செய்யவில்லை, அவர் களுக்கு உண்டான க்ஷேமநலங்கள் சம்பந்தமாக என்ன திட்டங்கள் போடப்பட்டிருக்கின்றன? ஏதோ தொழிலாளர் களுக்கு இரண்டொரு இடங்களில் வீடு கட்டிக்கொடுத்தார்கள். அந்த ஒன்றையும் சரியாகச் செய்யவில்லை. வேறு திட்டம் எதுவும் கிடையாது. இதுதான் இன்றுள்ள நிலைமை.

"ஷாப் அண்டு எஸ்டாப்ளிஷ்மெண்ட் ஆக்ட்" ஒன்று நிறுவி னார்கள். மத்திய அரசாங்கத்தார் அதற்கு உண்டான வழியில் புதிதாகக் கொண்டுவரப்போவதாகச் சொன்னார்கள். அந்தமாதிரி இன்னும் கொண்டுவரவில்லை. ஆகவே தொழிலாளர்கள் சம்பந்தப் பட்டவரையில் இந்த அரசாங்கமும் சரி, மத்திய அரசாங்கமும் சரி, என்ன நல்ல வேலைகள் செய்யப்போகிறார்கள் என்பதைப் பற்றி கவர்னர் அவர்கள் தம் பிரசங்கத்தில் ஒன்றும் சொல்ல வில்லை. தொழில் அமைச்சர் அவர்கள் கடந்த ஆறுமாத காலத் திற்குள் நல்ல சிறந்த பணியைச் செய்திருக்கிறார்கள். அவர்களுக்கு எங்களுடைய நன்றியையும், பாராட்டுதலையும் சொல்லிக்கொண்டு என் பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

* **Sri T. KARIA GOUNDER**: கனம் சபாநாயகர் அவர்களே, கவர்னர் பெருமான் அவர்கள் ஆற்றிய உரையின் மீது என் னுடைய நன்றியைத் தெரிவிக்கும் முறையில் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். அவர் தம்முடைய பேச்சின் பாராவி லேயே வேலை நிறுத்தத்தைப்பற்றிக் குறிப்பிட்டிருக்கிறார்கள். ஆனால் அது சுமுகமாக முடிந்ததைப் பற்றியும், பாராட்டுதலையும் சொல்லியிருக்கிறார்கள். ஆனால் நாட்டிலே தொழிற்சங்கங்கள் என்று சொல்லக் கூடிய சங்கங்கள் எல்லாம் சேர்ந்து தொழி லாளர்களுக்கு ஏதோ சர்க்கார் சரிவரச் செய்யவில்லையென்று இந்தமாதிரியான வேலைநிறுத்தம் செய்ய திட்டமிட்டதனால் பொதுமக்கள் எவ்வளவு தூரம் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள் என்பதைப்பற்றியும் நான் சொல்லாமலேயே எதிர்க்கட்சியில் பேசிய நண்பர்கள் உணர்வார்கள் என்பதை இந்தச் சமயத்தில் நான் நினைப்பூட்ட விரும்புகிறேன்.

9th August 1960] [Sri T. Karia Gounder]

ஆகவே நான் சொல்ல விரும்புகிற ஒன்று என்னவென்றால் ரயில்வே தொழிலாளர்கள் எல்லாம்கூட வேலை நிறுத்தம் செய்யப் போவதாக குறிப்பிட்டவுடன் அது சம்பந்தப்பட்ட அதிகாரிகள் அழுகு பொருள்களை வெளி நகரங்களுக்கு ஏற்றுமதி செய்யப் போவதில்லை என்று சொல்லி விட்டார்கள். அதன் காரணமாக எங்கள் ஊரில் மட்டும் ஒரு லட்சம் ரூபாய் பெருமான தக்காளிக் கூடைகள் ஏற்றுமதி செய்யப்படாமல் நின்றுவிட்டன.

(Sri S. Ranganatha Mudaliar in the Chair.)

இதனால் எவ்வளவு நஷ்டம், பொதுமக்கள் எவ்வளவு பாதிக்கப் பட்டிருக்கிறார்கள், என்பதைப்பற்றி இந்தச் சமயத்தில் நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். ஏதோ மாநில சர்க்கார் போலீஸ் ஆட்சியைக் கொண்டு ரொம்ப பாதகங்கள் செய்தார்கள் என்று சொன்னார்கள். ஆனால் அம்மாதிரி செய்யாமல் இருந் திருப்பார்களேயானால் பொதுஜனங்கள் பாதுகாக்கப்படாமல் போயிருப்பார்கள் என்பதை இந்த நேரத்தில் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

மதிப்பிற்குரிய நிதி அமைச்சர் அவர்கள் காலையில் ஒரு மணி நேரமும், மாலையில் ஒரு மணி நேரமும் வேலை நிறுத்தத்தினால் பாதிக்கப்பட்ட இடத்தில் வேலை செய்வதாகச் சொல்லியிருந்தார் என்று வெளிவந்திருந்தது. அதைக் குறித்து நான் அவர்களுக்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறேன். இவ்வளவு சீக்கிரத்தில் இந்த வேலை நிறுத்தம் முடிந்ததுபற்றி நாம் எல்லோரும் கவர்னர் அவர்களுக்கு நன்றி செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறோம். இனியாவது தொழில் கட்சி சம்பந்தப்பட்ட நண்பர்கள் பொதுமக்களிடத்தில் இம்மாதிரியான குழப்ப நிலைமையை உண்டுபண்ணாமல் இருக்குமாறு அவர்களைப் பணி வுடன் கேட்டுக்கொள்ளுகிறேன். இந்தச் சமயத்தில் நான் உதா ரணம் ஒன்று குறிப்பிட விரும்புகிறேன். நேற்றைய தினம் மாலை யில் ஒரு வாலிபன் வந்தான். "நீ எந்த ஊர்" என்று கேட்டேன். "நான் ஆரணியிலிருந்து வந்திருக்கிறேன்" என்று சொன்னான். "எங்கே வந்தாய்" என்று கேட்டபோது, "வேலைதேடி வந்தேன்" என்றான். "ஆரணியைவிட்டு இங்கே வருவானேன்" என்று கேட்டதற்கு "நான் பட்டு நெசவாளி. கூலி அதிகம் வேண்டுமென்று கேட்டு எங்கள் தொழிற்சங்கம் வேலைநிறுத்தம் செய்தது. அதனால் இந்தத் தொழில் செய்கிறவர்கள் எல்லோரும் வேலையில்லாமல் இருக்கிறார்கள். தொழிற்சாலை மூடப்பட்டது. அதனால்தான் நான் வேலையில்லாமல் சென்னைக்கு வந்தேன்" என்று சொன்னான். இம்மாதிரி சங்கங்கள் இருப்பதனால் பொது மக்கள் பாதிக்கப்படுவதல்லாமல் வாலிபர்களெல்லாம் அவரவர் களுடைய இடங்களை விட்டு நகரங்களுக்கு வந்து வேலை தேடி அலைகிறார்கள். ஆகையால் தொழிற்சங்கங்கள் சரியான முறையில் வேலை செய்ய தொழிற்சங்கத் தலைவர்கள் நல்ல முறையில் பணி யாற்றவேண்டும் என்பதைத்தான் நான் சொல்ல விரும்புகிறேன். கவர்னர் உரையில் இரண்டாவது பாராவில் பாம்பிக்குளம்

[Sri T. Karia Gounder] [9th August 1960

திட்டம் நிறைவேறியதுபற்றி குறிப்பிட்டிருக்கிறார்கள். கேரளா விலிருந்து ஒரு சொட்டுத் தண்ணீர்கூட கிடைக்காது என்று பத்திரிகையிலே கொட்டை எழுத்துக்களில் எழுதப்பட்டிருந்தது. இருந்தாலும் பரம்பிக்குளம் திட்டத்திற்கு சர்க்கார் பணத்தை விரயம் செய்கிறார்கள் என்று எழுதினார்கள். ஆனால் நம்முடைய அமைச்சரவை—அதிலும் குறிப்பாக நிதி மந்திரி அவர்கள்—பரம்பிக்குளம் திட்டத்திலிருந்த சிக்கலை நீக்கி வெற்றிகரமான ஒரு முடிவுக்கு வந்தது குறித்து நாம் அவருக்கு நன்றி பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறோம்.

அடுத்தபடியாக மொழி சம்பந்தப்பட்டவரையில் ரொம்ப நாளாகப் பேசப்பட்டு வருகிறது. இந்த சமயத்தில் இங்கு ஒன்று ஞாபகப்படுத்த விரும்புகிறேன். 1923-ம் வருடத்திலே சென்னை சட்டமன்றத்தில் வகுப்புவாரி பிரதிநிதித்துவம் தீர்மானம் வந்தது. ஒரு அங்கத்தினர் சட்ட சபையிலே குறிப்பிட்டார்கள்—“பிரிட்டிஷார் இந்த நாட்டிற்கு வந்த காலத்திலே அவர்களை இருக்கசொல்லி நாங்கள் அடைக்கலம் கொடுத்து எங்களுடைய முயற்சியிலே பிரிட்டிஷார் இந்த நாட்டிலே வேரூன்றி இருக்க முடிந்தது. இம்மாதிரி வகுப்புவாத பிரதிநிதித்துவ தீர்மானம் நிறைவேற்றப்படுமானால் நாங்கள் எல்லோரும் எதிர்த்துப் போராடுவோம்” என்று சொல்லியது எனக்கு இந்த சமயத்தில் ஞாபகம் வருகிறது. காரணம் ஹிந்தியை சாதாரணமாக படித்துக் கொள்ளவேண்டுமென்று நியதி இருக்கிறதே தவிர கட்டாயம் படிக்கவேண்டும் என்று இல்லை. மத்திய சர்க்காரில் உத்தியோகத்தை விரும்பி தேவை என்று படிக்கிறவர்கள் படிக்கலாம் என்ற விதி இருக்கிறது. ஆனால் நிர்வாகப் பொறுப்பிலே ஆங்கிலமே தொடர்ந்து இருக்கவேண்டுமென்று நமது சட்டசபையிலே எல்லாத் தலைவர்களும் கட்டுப்பாடாக ஏகமனதாக செய்த முடிவைப்பற்றி மீண்டும் முன்போலவே ஒரு குழப்பத்தைக் கொண்டுவருவது பெரும் வருத்தத்தைக் கொடுக்கக் கூடிய நிலையில் இருக்கிறது. நமது மேன்மை தங்கிய ஜனாதிபதி வருகின்றபோது கருப்புக்கொடி காட்டவேண்டுமென்று சொன்னார்கள். ஆனால் அதிர்ஷ்டவசமாக அதைக் கைவிட்டு விட்டார்கள்; வெற்றி கண்டோம் என்று சொன்னார்கள். அதற்கு நாம் அவர்களைப் பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறோம். ஆனால் அடுத்து ஆகஸ்ட் 31-ம் தேதி ஹிந்தியை எதிர்க்கப்போவதாக சொல்லுகிறார்கள். ஆனால் முன்பு எடுத்த முடிவு என்ன ஆயிற்று என்று தெரியவில்லை. கனம் நிதி அமைச்சர் அவர்கள் பதில் சொல்லும்போது குறிப்பிடுவார்கள் என்று விரும்புகிறேன். இந்த நாட்டிலே தமிழ் ஆட்சிமொழியாக இருக்கவேண்டுமென்று சர்க்கார் தீவிர கவனம் செலுத்தி கோயம்புத்தூரிலே காலேஜ் படிப்பு அளவிற்கு தமிழிலே சொல்லிக்கொடுக்கவேண்டியது என்ற திட்டத்தை நிறுவி இருக்கிறார்களென்றால் நாம் எல்லோரும் பெருமைபபடவேண்டுமென்று இந்தச் சமயத்தில் நான் குறிப்பிட விரும்புகிறேன். இப்போது மைல் கற்களில் ஹிந்தி இருக்கிறது, ரூபாயில் ஹிந்தி இருக்கிறது, கார்டில் ஹிந்தி இருக்கிறது என்று சொன்னார்கள். வெள்ளைக்காரன்

காலத்திலே தெலுங்கு, கன்னடம், மலையாளம், ஹிந்தி, ஆங்கிலம் எல்லாம் இருந்தன என்று நினைவுப்படுத்த விரும்புகிறேன். ஆனால் நண்பரிடம் ஒன்றே ஒன்று கேட்டுக்கொள்ள வேண்டும் என்பது என்னுடைய ஆசை. கேரளா, கன்னடம், ஆந்திரா ஆகிய இந்த மூன்று ராஜ்யங்களையும் கூட்டி ஹிந்தி மொழிக்குப் பதில் தமிழ்த்தாய் சிம்மாசனம் ஏறவேண்டும் என்று தீர்மானம் வாங்கி மத்திய சட்டசபையிலே கொண்டுபோய் இந்த நாட்டின் அரசாங்க மொழி தமிழாக வேண்டுமென்று அவர்கள் வாதித்தால் இந்தக் குழப்பம் எல்லாம் வரவேண்டிய அவசியம் இல்லை. இமயம் முதல் குமரிவரை தமிழ் நாடாக இருந்தது, இந்தியாவில் உள்ளவர்கள் எல்லோரும் தமிழிலேயே பேசி வந்தார்கள் என்று தமிழ் ஆராய்ச்சியாளர்கள் சொல்லி வருகிறார்கள். (குறுக்கிடு) புதுக்குழப்பம் உண்டாக்குவது என்னுடைய எண்ணம் அல்ல. இதனால் தமிழ்த்தாய் தலைநிமிர்ந்து நிற்கவேண்டும் என்பதுதான். ஹிந்தி வேறு என்று நாம் சொன்னால் தமிழ் வேறு என்று வடக்கே உள்ளவர்கள் சொல்லுகிறார்கள். எனக்குக்கூட பொறாமை வரும் சில சமயங்களிலே.

கோயம்புத்தூரைப் பார்த்து நாங்கள் தெற்கு வளருகிறது என்று சொல்லலாம். இங்கு ஏறத்தாழ 9 லட்சம் ஏக்கருக்கு நீர் பாசனம் பெறும் நம்பிக்கை இருக்கிறது. பரம்பிக்குளம் திட்டம் இருக்கிறது. லோயர் பவானித் திட்டம் இருக்கிறது. அதோடு கைத்தொழிலிலும் முன்னேற்றம் அடைந்திருக்கிறது. வேலூரில் உள்ள நாங்கள் தெற்கு வளருகிறது என்று சொல்லி கோயம்புத்தூரைப்பற்றி பொறாமைப்படலாம், ஆனால் பிரயோஜனம் இல்லை என்பதை நாம் புரிந்துகொள்ளவேண்டும். இம்மாதிரி பிரிவு மனப்பான்மை இருப்பதனால்தான் அன்னியர்கள் நம்மை ஆள முடிந்தது என்று இந்த சமயத்தில் நண்பர்களுக்கு நினைவு படுத்த விரும்புகிறேன். கோயம்புத்தூர் மாவட்டத்தில் சூழ்நிலை அப்படி இருக்கிறது. அமராவதி ஆறு இருக்கிறது. பரம்பிக் குளம் ஆறு இருக்கிறது. லோயர் பவானி ஆறு இருக்கிறது. எங்கள் ஊரிலே தண்ணீர் இல்லாத ஏரி; எங்கள் பகுதியிலே சூழ்நிலை அப்படி இருக்கிறது. அதற்கு கோயம்புத்தூரைப்பற்றி பேசுவதாக இருந்தால் அர்த்தமே இல்லை. அவர்கள் எல்லாவிதத்திலும் முன்னேற்றம் கண்டிருக்கிறார்கள். இதனால் நாம் எல்லோரும் ஒற்றுமையாக முன்னேறவேண்டும் என்ற முறையில் தான் சொல்ல விரும்புகிறேன்.

தூத்துக்குடி துறைமுகத்தைப்பற்றி நேற்று சர்க்காரை கண்டித்து பேசப்பட்டது, இந்தச் சட்டசபையில். அப்போது கனம் நிதி அமைச்சர் அவர்கள் ஆதாரத்தோடு விளக்கம் கொடுத்திருக்கிறார்கள். நேற்றுதான் மூன்றாவது ஐந்தாண்டு திட்டத்தைப் பற்றிய புஸ்தகம் கொடுத்தார்கள். தூத்துக்குடி துறைமுகத்தைப்பற்றி அதில் விட்டிருக்கலாம். சேலத்தில், தென் ஆற்காட்டில் கிடைக்கும் பழுப்பு நிலக்கரியை வைத்துக் கொண்டு, இரும்புத் தொழிற்சாலை ஆரம்பிக்கவேண்டுமென்று பல தடவை சட்டசபையில் பேசும்போது அதற்கு கனம் நிதி அமைச்சர் அவர்கள் பதில் அளித்திருக்கிறார்கள், இது பரிசிலனை

[Sri T. Karia Gounder] [9th August 1960

யில் இருக்கிறது என்று. பழுப்பு நிலக்கரி நெய்வேலியில் இருக்கிறது. நான் அடிக்கடி 4, 5, முறை நெய்வேலிக்குச் சென்றிருக்கிறேன். கிழக்கு ஜெர்மனியிலிருந்து வந்த நிபுணர்கள் பரிசீலனை செய்துகொண்டிருக்கிறார்கள். இதில் வெற்றி கண்டால் தென் ஆற்காட்டுக்கு பெரிய தனம்தான்.

சம்பளக் கமிஷனைப் பற்றி ஒரு வார்த்தை சொல்ல விரும்புகிறேன். என்.ஜி.ஓ.-க்களைப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்று ஒரு சில நண்பர்கள் நம்பிக்கொண்டிருந்தார்கள். சம்பளக் கமிஷன் உயர்வு கொடுத்த பிறகு நமது நிதியமைச்சர் அவர்கள் எங்கள் ஜில்லாவிற்கு ஒரு மாநாட்டிற்கு வந்திருந்தார்கள். அந்த மாநாடு நடந்த அன்று மாலை எனது நண்பர் ஒருவர் சொன்னார், "எனது சம்பள உயர்வு பற்றிய சர்க்கார் உத்தரவு வந்து விட்டது, எனக்கு 230 ரூபாயிலிருந்ததற்குப் பதில் 375 ரூபாயில் ஆரம்பிக்கப் போகிறார்கள், நாங்கள் நிதியமைச்சர் அவர்களுக்கு நன்றி செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறோம்" என்று சொன்னார்கள். ஆசிரியர்கள் எல்லோரும் சந்தோஷப்படுகிறார்கள். 3-லிருந்து 5-க்குப் போய் விட்டது, 7-லிருந்து 12-க்குப் போய் விட்டது மின்சாரம் என்று நேற்று கனம் அங்கத்தினர் திரு. சின்னதுரை அவர்கள் சொன்னார்கள். நெய்வேலியை எடுத்துக் கொள்ளுங்கள், குந்தாவை எடுத்துக் கொள்ளுங்கள். அதிலே உற்பத்தியாகும் லட்சக்கணக்கான கிலோ வாட்ஸ் மின்சாரத்தை மக்களுக்குக் கொடுக்கப் போகிறார்கள் அரசாங்கத்தார். "வாய் கொழுப்பு சீலையில் வழிந்தது" என்று ஒரு பழமொழி சொல்வார்கள். ஆக, அவசரப்படாமல் நிதானமாக யோசித்துப் பார்க்கவேண்டும். நாம் எதிர்ப்பார்க்கும் இந்த லட்சக்கணக்கான கிலோ வாட்ஸ் மின்சாரம் உற்பத்தியானால் தமிழ் நாட்டின் மூலை முடுக்குகளுக்கெல்லாம் மின்சாரம் கொடுக்கப்போகிறோம். மின்சாரத் துறையில் மாகாணத்தில் முதன்மையில் இருக்கிறது வேலூர் தாலுக்கா.

அடுத்தபடியாக பஞ்சாயத்து ஆக்டைப் பற்றி விரிவாகச் சொல்லியிருக்கிறார்கள். பின்னர், பள்ளிக்கூடங்கள். பத்து லட்சம் பிள்ளைகளுக்கு பகல் உணவு கொடுக்கிறோம். 15 லட்சம் பிள்ளைகளுக்கு உடை வழங்குகிறோம். பள்ளிக்கூடங்கள் இல்லாத ஊரே கிடையாது, கட்டிடம் இல்லாத ஊரே கிடையாது. பின்னர், பத்திரிகையில் படித்ததைச் சொல்கிறேன், திறந்த பள்ளிகளை இழுத்து மூடும் அவல நிலைகண்டு வருத்தப் படுகிறோம். கல்விக்காக 16 கோடி செலவு செய்கிறோம். 12 ஆண்டுகளில் 40 பர்சென்ட் பேர்கள் படித்தாகி விட்டது. பிரிட்டிஷ் ஆட்சியில், 200 வருடங்களில் 3 பர்சென்ட் பேர் கூட படிக்கவில்லை. இப்பொழுது 40 பர்சென்ட் ஆகி விட்டது. இது ஒரு பெரிய முன்னேற்றம் அல்லவா? அடுத்த ஆண்டு முதல் 10-வது வகுப்பு வரை இலவசக் கல்வி கொடுக்கப் போகிறோம். அப்பொழுது உயர்ந்தவன், தாழ்ந்தவன், முற்பட்டவன் என்று இருக்காது. ஆக, அப்படி அரசாங்கம் முடிவு செய்திருப்பதைப் பார்க்க மகிழ்ச்சி அடைகிறோம். அதற்காக அரசாங்கத்திற்கு நன்றி செலுத்தவும் கடமைப்பட்டிருக்கிறோம். ஆக, நாங்கள்

என்ன செய்தாலும் குற்றங்குறை சொல்லிக் கொண்டே மக்கள் மனதைக் குழப்பாதீர்கள். 25 கோடி ரூபாய் வரை கல்விக்காக செலவு செய்யப் போகிறோம். நாங்கள் அதிகப்படியான பள்ளிக் கூடங்கள் வைக்கப் போகிறோம். அது உங்களுக்கு பிடிக்கவில்லையென்றால், பொது மக்களிடம் வேண்டாம் என்று சொல்லுங்கள். ஆனால் தேர்தல் நெருங்க நெருங்க மக்கள் மனதைக் குழப்பாதீர்கள். மக்களுக்கு ஒன்றும் தெரியாது. தென் ஆற்காட்டிற்கு போகும்போது, அங்கு பார்த்தால் கோவணம் கட்டியவர்கள் அதிகம் பேர்களைப் பார்க்கிறோம். அவர்களுக்கு ஒன்றும் தெரியாது. மக்களின் சராசரி வருமானத்தை உயர்த்துவதற்கு வேண்டிய நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்பட்டு வருகின்றன.

அடுத்தபடியாக, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் கண்டிருக்கிற வெற்றியோடு தூத்துக்குடி துறைமுகத் திட்டத்தையும் நிறைவேற்றி வைக்கவேண்டும். அதோடு இந்த இரும்புத் தொழிற்சாலையையும் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்ப்பதற்கு மத்திய சர்க்காரிடம் சொல்லி ஆவன செய்ய வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டு கவர்னர்பிரான் அவர்கள் உரையை ஆதரித்து, போற்றி, எனது உரையை முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

**SRI G. NARAYANASAMI NAIDU** அன்பு மிக்க தலைவர் அவர்களே, கவர்னர்பிரான் உரையை ஆதரித்து அதன் காரணமாக ஒரு சில வார்த்தைகள் சொல்லலாமென்று ஆசைப் படுகிறேன். இந்த உரை பற்றிப் பேசிய சக அங்கத்தினர்கள் அவ்வளவு பேர்களும் ஒன்றை மிக முக்கியமாக எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். கவர்னர் அவர்களும் அதைக் குறிப்பிட்டிருக்கிறார்கள், அதாவது என்.ஜி.ஓ.-க்கள் வேலை நிறுத்தம் என்பது பற்றி. அகில இந்திய சர்க்கார் ஊழியர்களைப் பற்றி மிகவும் அதிகமாக இரு தரப்பார்களும் சொல்லியிருக்கிறார்கள். அவர்கள் அதிக சம்பளம் கேட்பதில் ஆச்சரியம் இல்லை. ஆனால், அதை அதிகரிப்பதற்கு முன் ஜனத்தொகையில் அவர்கள் சராசரி எவ்வளவு சதவீதம், அதை விட பலமான நல்ல வேலை செய்பவர்கள், இன்று அவர்கள் பெறுகிற கூலி எவ்வளவு என்பதைப் பற்றி சிந்தித்திருக்க வேண்டாமா, என்று நான் கேட்கிறேன். ரயில் இல்லாமல் ஒரு காலத்தில் மனிதர்கள் வாழ்க்கை நடத்தியதுண்டு. தபால், தந்தி இன்றி மனிதர்கள் ஒரு காலத்தில் வாழ்க்கை நடத்தியதுண்டு. ஆனால் மனிதன் என்றுமே ஆகாரம் இல்லாமல் வாழ்க்கை நடத்தியதாக இருந்ததில்லை. இன்று மேற்குறிப்பிட்டவர்களுக்குக் கிடைக்கக் கூடிய கூலி, சர்க்கார் ரீதியில் ஒரு மரக்கால், அதாவது இரண்டு பட்டணம் படி நெல். அவர்கள் தான் இந்த தேசத்தின் முதுகெலும்பாக இருக்கக்கூடியவர்கள். அவர்கள் கூலியை உயர்த்துவது பற்றி ஒரு சப்தத்தையும் காணோம். ஆனால் சம்பளம் அதிகமாக வாங்கிக் கொண்டிருப்பவர்களின் சம்பளத்தை மேலும் மேலும் அதிகப்படுத்த வேண்டுமென்று பலமான கிளர்ச்சி செய்வதில் பெரிய பலன் ஏற்படும்

[Sri G. Narayanasami Naidu] [9th August 1960

என்று கருத முடியும் என்று எனக்குத் தோன்றவில்லை. நமக்கு ஆகாரம் அளிக்கக்கூடியவர்களின்—அம்மனிதர்களின்—வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்கு வேண்டிய நடவடிக்கைகள் எடுப்பதுதான் முக்கியமானதாகும் என்று சொல்ல விரும்புகிறேன். அதோடு, இப்பொழுது நாம் பின்தங்கியிருக்கிறோமா அல்லது முன்னேறியிருக்கிறோமா என்பது பற்றி இரண்டு மூன்று வழிகளில் சிந்தித்துப் பார்க்கவேண்டும். எங்கள் ஊரில் முன்பு ஒரு சினிமா கொட்டகை வைத்திருந்தவர் அதை எடுத்து விட்டு போய் விடுவோமா அல்லது வைத்துக் கொண்டிருப்போமா என்று ஆலோசித்துக் கொண்டிருந்தார். இப்பொழுது 5, 6 கொட்டகைகள் இருப்பதோடு இன்னும் 6, 7-க்கு லைசென்ஸ் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். அதேபோன்று ஒரு பஸ் போவதா வேண்டாமா என்ற நிலை போக இப்பொழுது எவ்வளவோ கம்பெனிகள் 400 பஸ் என்றிருந்தும் கூட, பிரயாணிகளுக்கு சௌகரியமாகச் செல்வதற்கு முடியவில்லை. பஸ்ஸில் இடம் கிடைக்க மாட்டேன் என்கிறது. பள்ளிக்கூடங்களில் இடம் கிடைக்க மாட்டேன் என்கிறது. ரயிலில் இடம் கிடைக்கமாட்டேன் என்கிறது ஆக நான் குருட்டாம்போக்கில் சொல்கிறேன், பொருளாதார ரீதியில் சொல்லவில்லை, நாம் பின்தங்கி நிற்கவில்லை, எங்கு பார்த்தாலும் முன்னேறிக் கொண்டுதான் இருக்கிறோம் என்று. சிகரெட் இறக்குமதியைப் பார்த்தால் முன்பு இருந்ததைவிட இப்பொழுது ஆறு, எழு மடங்கு உள்நாட்டு உற்பத்தியைவிட வெளிநாட்டிலிருந்து இறக்குமதி அதிகமாயிருக்கிறது. அதில் கூட அதிகமாகியிருக்கிறது. ஆக, நாம் பின்தங்கி நிற்கவில்லை. டாம்பீகம் நாளுக்குநாள் அதிகமாகிக் கொண்டிருக்கிறது. ஆடம்பரச் செலவுகள் அதிகமாகிக் கொண்டிருக்கின்றன. ஒருவன் வாரத்திற்கு இரண்டு முறை சினிமா பார்க்கத் தவறுவதில்லை, ஒரு நாளைக்கு இரண்டு பெட்டி சிகரெட் காலியாக்கத் தவறுவதில்லை. ஆகவேதான் படித்தவர்களிடையே சம்பளக் கூடுதல் கோரிக்கை வற்புறுத்தப்பட்டு வருகிறது. ஆகவே, இவைகளையெல்லாம் சர்க்கார் நிறுத்தினால் இம்மாதிரி கோரிக்கைகள் பின்னால் வந்து ஒருவித தொந்தரவும் ஏற்படாது என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். இதை சர்க்கார் கவனத்தில் வைக்க வேண்டும். கவர்னர் உரையில் மின்சாரம் பற்றி சொல்லப்பட்டிருக்கிறது. எதிர்க் கட்சி நண்பர் கனம் சின்னதுரை அவர்கள் சொன்னார்கள், 4-லிருந்து 8-க்கு வந்து விட்டது என்று. ஆனால் விளக்கமாகச் சொல்லவில்லை. ஒருவர் எழுதியிருந்தார், "சீனாவில் ஆகாரம் அதிகப்படியாயிருக்கிறது, ஆகவே 1970-ம் வருடம் பிறந்தால் அந்தத் தேசத்தில் உணவுப் பற்றாக்குறை ஏற்பட்டு ரேஷன் கொடுக்கவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படும்" என்று. ஆக, "மால்-தூஸியன் தியரி"யை யார் எதிர்த்து வந்தார்களோ அவர்களே அந்தச் சித்தாந்தத்திற்கு வந்தாக வேண்டுமென்று அரசியல் அறிஞர்கள் எழுதியிருந்தார்கள். நாம் மின்சாரத்தை உபயோகப்படுத்தி, ஒவ்வொரு மனிதரும் உபயோகப்படுத்துவதால் நமது பற்றாக்குறை 3, 4, 5 தரத்திற்கு வந்து விடுமோ அல்லது பாக்கி மாகாணங்கள் உபயோகப்படுத்துவதைக் குறைத்து அவர்கள் முதல் ஸ்தானம் அடைந்து முன்னுக்கு வந்து விடுவார்

9th August 1960] [Sri G. Narayanasami Naidu]

களோ என்பது போன்றவைகளை விளக்கிச் சொல்லியிருந்தால், எந்தப் புள்ளிவிவரத்தை வைத்துத் தெரிவித்தார்கள் என்பதை நாம் தெரிந்துகொண்டிருக்க முடியும். 10 30 a.m.

நம்மையெல்லாம் மயக்கத்தில் ஆழ்த்துவதற்குத்தான் அந்த பிரசங்கம் பயன்பட்டது. இன்னொரு தடவை அவர்கள் இதைப் பற்றி பேசும் போது எப்படி மூன்றும் தரமாகவும் நான்காம் தர மாகவும் இறங்கிக் கொண்டிருக்கின்றோம் என்பதைப்பற்றித் தெளி வாகச் சொல்ல வேண்டும். அது எந்தெந்தப் படிகளில் இறங்கிக் கொண்டிருக்கிறது என்று தெரிந்தால் அதன் வழி நாம் இறங்கிக் கொள்ளலாம் என்று ஆலோசனை செய்கின்றேன். ஆகவே, இன்னொரு தடவை அவர்கள் பேசும்போது இதைப்பற்றி விளக்கமாகப் பேசுவார்கள் என்று எதிர்பார்க்கிறேன்.

அடுத்தபடியாக, எங்கள் ஜில்லாவில் ஒரு புதிய புரட்சியை உண்டு பண்ணிவிட்டார்கள். தண்ணீர் கிடைக்கவில்லை, எரு கிடைக்கவில்லை என்ற ஒரு புரட்சி பத்திரிகைகளில் வந்தது. அகில இந்திய ஊழியர்களுடைய புரட்சி பத்திரிகையில் எப்படி வந்து கொண்டிருந்ததோ அதைப்போல் இதுவும் ஒரு பெரிய புரட்சியாக வந்துக்கொண்டிருந்தது. இதைப் பார்த்துவிட்டு அங்கிருந்த ஊழியர்கள் எல்லாம், கலெக்டர், ஆர்.டி.ஓ.-க்கள் எல்லாம், ஓடோடி வந்து எல்லா இடங்களையும் பார்வை யிட்டார்கள். யாரோ வேண்டாதவர்கள் முக்கால் அணு செலவு செய்து ஏதோ ஒன்றைக் கிளப்பிவிட்டால் இம்மாதிரித்தான் பெரிய புரட்சிபோல் வந்துவிடுகிறது. அதோடு அங்கு சரியாக வேலை செய்து கொண்டிருக்கும் அதிகாரிகளுக்கும் "நீ எவ்வளவு வேலை செய்தாலும் இதுதான் நிலை" என்று சொல்லக்கூடிய அளவுக்கு நிலைமை வந்துவிடுகிறது. இதன் காரணமாக அதிகாரி களுக்கு உற்சாகக் குறைவு ஏற்பட்டுவிடுகிறது. தண்ணீர் வருவ தற்கு முன்னால் ஒரு அவசியமில்லை என்பது பத்திரிகைக்காரர் களுக்குத் தெரியாது என்று நினைக்கிறேன். அவர்கள் இதைப் பற்றி சிந்திக்கவேயில்லை. பொதுவாக நகரத்தில் இருந்துகொண்டு பத்திரிகை நடத்துகிறவர்களுக்கு விவசாயத்தைப் பற்றி ஒன்றுமே தெரியாது என்றுதான் எண்ண வேண்டியிருக்கிறது. தண்ணீர் வந்து, உழுது, பண்படுத்தப்பட்ட பின்னால்தான் எரு போடமுடியும்; அதற்கு முன்னால் குப்பை உரம் மட்டும்தான் போடமுடியும். ஆனால் பத்திரிகைகள் இந்த இரண்டையும் சேர்த்துக் குழப்பிவிட்டதோ என்னவோ தெரியவில்லை. தண்ணீர் வரவில்லை, எரு கொடுக்கப்படவில்லை, இதன் காரணமாக தஞ்சை ஜில்லாவில் பயிர்கள் எல்லாம் பாழாய் போய்விட்டது, அதி தீவிர சாகுபடி திட்டத்தில் உற்சாகக் குறைவு ஏற்பட்டுவிட்டது என்று அரசியல் பிரசாரத்திற்காகவோ என்னவோ தெரியவில்லை, இவ்விதம் ஒரு புரட்சியைக் கிளப்பிவிட்டார்கள், அரசியல் பிரசா ரமாக இருக்கவில்லை, அதிகாரிகளைத் தாக்குகின்ற முறையில் தலையங்கங்களை எழுதி அதிகாரிகளின் மீது குற்றச்சாட்டுகளை தெரிவித்தார்கள். இதன் மூலமாக நல்ல உற்சாகத்தோடு வேலை செய்துகொண்டிருக்கும் அதிகாரிகளைப் பார்த்து நீங்கள் வேலை ஒன்றும் செய்யாதீர்கள், என்னசெய்தாலும் இதுதான் நிலை என்று

[Sri G. Narayanasami Naidu] [9th August 1960

அவர்களுக்குச் சொல்வதுபோல் இருந்தது. ஆனால், உண்மையில் 10-30 a.m. அங்கு அப்படி ஒன்றும் நடந்து விடவில்லை. நல்ல முறையில்தான் விவசாயம் நடந்துகொண்டிருக்கிறது. அகில இந்திய ஊழியர்களுடைய போராட்டம் எவ்வளவு முக்கியமானதோ அவ்வளவு முக்கியமானது தஞ்சை ஜில்லாவில் நடக்கும் அதி தீவிர சாகுபடித் திட்டமும். அங்குதான் முதலில் இந்தத் திட்டம் அங்கு ரார்ப்பணம் செய்யப்பட்டது. அதோடு குறிப்பிட்ட உற்பத்தி அளவையும் எட்டிய ஜில்லா எங்கள் ஜில்லா. திடீரென்று அந்த ஜில்லாவில் ஒன்றும் ஏற்பட்டுவிடவில்லை, தண்ணீர் கிடைக்கவில்லை, உரம் கிடைக்கவில்லை என்று சொல்லியிருப்பது எல்லாம் சரியல்ல என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்தச் சந்தர்ப்பத்தில் இன்னொன்றையும் நாம் பரிசிலனை செய்து பார்க்கவேண்டும். அதாவது எப்போதும் போலவே குடகில் 12 அங்குலம் மழை பெய்திருக்கிறது என்று தெரிகிறது. அப்படியிருக்கும்போது திடீரென்று காவேரியில் மேட்டூருக்கு அந்தப்பக்கம்—அதாவது கன்னம்பாடி பகுதிக்கு இந்தப் பக்கம் மட்டும்—தண்ணீர் குறைந்து வருவதன் காரணமென்ன என்பதைப் பற்றி நாம் பரிசிலனை செய்யவேண்டும். இதைப்பற்றியெல்லாம், எனது சக அங்கத்தினர் திரு. சீனிவாச அய்யர் அவர்கள் பல கணக்குகளை எல்லாம் வைத்துக்கொண்டிருக்கிறார்கள். கன்னம்பாடியில் இருக்கும் அதிகாரிகள் ஏதாவது பயமுறுத்துகிறார்களா என்ற சந்தேகமும் ஏற்படுகிறது. காவேரியின் இந்தப் பக்கத்தில் மட்டும் தண்ணீர் குறைவாக வருவதற்குக் காரணம் என்ன, நமக்கும் மைசூர் அரசாங்கத்திற்கும் ஏற்பட்ட ஒப்பந்தங்கள் சரியாக அமல் நடத்தப்படுகின்றனவா என்பதைப்பற்றியும் நாம் பரிசிலனை செய்து பார்க்கவேண்டும். முன்னால் பெய்த மழையை வைத்துக்கொண்டு பார்த்தால் மேட்டூரில் இப்போது இருப்பதை விடக் கூடுதலாகத் தண்ணீர் இருந்திருக்கவேண்டும். எங்கெங்கு புதிதாகத் தண்ணீர் கொண்டு போகப்படுகிறது என்பதைப் பற்றியும் நாம் ஆராய்ந்து பார்க்கவேண்டும். இதையெல்லாம் விட்டுவிட்டு, பின்னால் 'வந்ததும் போச்சு' என்ற நிலையில் ஆகாதபடி நாம் பார்த்துக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். எங்கள் ஜில்லாவிலிருந்து இருக்கும் அமைச்சர் அவர்கள் தொழில் நுணுக்கங்கள் எல்லாம் நன்றாகத் தெரிந்தவர். இதைப்பற்றியும் கவர்னர் அவர்களுடைய உரையில் குறிப்பிட்டிருக்கலாம். அதோடு காவேரி டெல்டா ஓரங்களிலெல்லாம் மண்ணெண்ணெய், கியாஸ், போன்றவைகள் கிடைக்கின்றன என்றும், அதற்கான ஆராய்ச்சிகள் நடத்தப்பட்டு வருகின்றன என்றும் தெரிகிறது. எங்கள் ஜில்லாவில் இந்த இடங்கள் எங்கெங்கு இருக்கின்றன என்பதைப்பற்றியும் கவர்னர் பெருமான் அவர்கள் இரண்டொரு வார்த்தைகள் ஜாடையாகக் குறிப்பிட்டிருக்கலாம். (குறுக்கீடு: குறிப்பிட்டிருக்கிறார்கள்.) எந்த இடத்தில் என்று தெரிந்தால் அந்த இடத்தையாவது போய் வாங்கியிருக்கலாம். காவேரி எங்கள் பக்கத்தில் இருப்பதால் அந்த எண்ணம் ஏற்படுகிறது. இதையும் இரண்டொரு வருஷங்களுக்குள் சிறந்த முறையில் எவ்வளவு நன்றாகச் செய்ய முடியுமோ அதைச் செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

9th August 1960] [Sri G. Narayanasami Naidu]

கல்வியைப் பொறுத்தவரையில் சுமார் 10 லட்சம் மாணவர்களுக்கு சாப்பாடு போடுகிறோம். வேறு எந்த மாகாணத்திலும் செய்யாத அளவு நாம் இந்த காரியத்தைச் செய்திருக்கிறோம். அதோடு உடையும் சேர்த்துக் கொடுத்துவிட்டால் ஓரளவுக்கு ஜாதி வித்தியாசம் போவதற்கும் ஒரு வழியாக இருக்கும் என்று எண்ணுகிறேன். ஒரே மாதிரியான உடை கொடுத்தால் ஏற்கனவே இருந்துகொண்டிருக்கும் ஜாதி வித்தியாசம் ஒழிந்து போவதற்கு வசதியாக இருக்கும் என்று நம்புகிறேன். ஆகவே அதையும் சர்க்கார் உடனடியாகச் செய்யும் என்று எதிர்பார்க்கிறேன்.

அடுத்தபடியாக, இன்றையதினம் பிரதானமாக இருந்துகொண்டிருப்பது நிலச் சீர்திருத்தம். அதற்கு அடுத்தது கூட்டுறவு சாகுபடி. இவைகளைப்பற்றி கவர்னர் அவர்களுடைய உரையில் கொஞ்சம்கூட குறிப்பிடவில்லை. இது மிகவும் அவசியமானது. கூட்டுறவு சாகுபடி முறையைக் கொண்டுவரவேண்டும் என்கிற எண்ணம் நமது சர்க்காருக்கு ரொம்பகாலமாகவே இருந்து கொண்டிருக்கிறது. இதன் பேரில் பல இடங்களில் பரீட்சைகளும் நடந்துகொண்டிருக்கின்றன. ஆனால் பல சர்க்கார் அதிகாரிகள்கூட இதற்கு எதிரிடையாக வேலை செய்துவருவதாகப் பத்திரிகைகளில் பார்க்கிறோம். கூட்டுறவு சங்கத்தில் இருக்கின்றவர்களே, கூட்டுறவு சாகுபடியை எதிர்க்கின்றார்கள். தர்மம் என்ற பெயரைச் சொல்லிக்கொண்டு அதர்மத்தை நடத்திக்கொண்டிருக்கின்றவர்கள் இதை எதிர்த்துக் கொண்டிருக்கிறார்கள். மணலி எஸ்டேட் போன்றவைகள் 15 ஆயிரம் வேலி நிலங்களை வைத்துக்கொண்டு 10 பேர்களுக்குச் சாப்பாடு போட்டு, நடுவாரந்தார்களையும் தாங்கள் வைத்துக் கொண்டு, சாதாரண மக்களைத் தொந்தரவு செய்து கொண்டிருக்கிறார்கள். திருவிளப்புத்தூர், கள்ளப்புலியூர் இந்த இடங்களைப்பற்றி நான் அடிக்கடி சொல்லியிருக்கிறேன். அந்த இடங்கள் இப்போது மிகவும் பின்னடைதான் போய்க்கொண்டிருக்கின்றனவே தவிர முன்னேறியிருப்பதாகத் தெரியவில்லை. ஆகவே இதில் போதிய கவனம் செலுத்தவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அதோடு இந்த நிலச் சீர்திருத்தச் சட்டத்தைப் பற்றி அறுபது, எழுபது கேள்விகளைப் போட்டு, மக்களிடையே மயக்கம் வரும்படியான நிலையில், பலவிதமான ஆட்சேபனைகளைக் கிளப்பும்படியான அளவில், மிகுந்த ஜாக்கிரதையாக இருக்கும்படியான அளவில் போடப்பட்டிருக்கிறது. மக்களின் பிரதிநிதிகளாக நாம்தான் இங்கே இருந்துகொண்டிருக்கிறோம். இரண்டு தரப்புக்காரர்களும்--ஆளும் கட்சியினரும், எதிர் கட்சியினரும்—இங்கே இருக்கிறோம். இதைப்பற்றி நாம் இங்கே பேசுவதற்கு சந்தர்ப்பங்கள் இருக்கின்றன. அதைவிட்டு பொதுவாக மக்களிடத்தில் இவ்விதம் அபிப்பிராயங்களைக் கேட்டு கொண்டுவரப்பட்டது என்ற எண்ணத்தையெல்லாம் பரப்புவதற்கும், அதன் மூலம் பல குழப்பங்களை ஏற்படுத்துவதற்கும் வழி செய்கிறது. அதனால் சட்டமே பலஹீனமாய் போய்விடக் கூடாது. அந்த முறையில் எந்தவிதமான பலஹீனமும் ஏற்பட்டு விடாமல் ஜாக்கிரதையாக இதில் வேண்டிய நடவடிக்கைகள்

[Sri G. Narayanasami Naidu] [9th August 1960

எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொண்டு கவர்னர் பெருமான் அவர்களுடைய உரையை ஆதரித்து என் வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன்.

**Sri A. V. P. ASAITHAMBI** : தலைவர் அவர்களே, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே தூத்துக்குடியும், மங்களூரும் புறக்கணிக்கப்படவில்லை, அவைகள் நிச்சயமாகச் சேர்த்துக்கொள்ளப் படும் என்கின்ற அளவில் நிதி அமைச்சர் அவர்கள் கூறினார்கள்— (கனம் ஸ்ரீ. ஸி. சுப்பிரமணியம் : மங்களூரைப் பற்றி நான் சொல்லவில்லை)—தூத்துக்குடியைப் பற்றிக் கூறினார்கள். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தைப் பொறுத்த வரையில் தூத்துக்குடி கைவிடப்பட்டது, அல்லது ஒத்தி வைக்கப்பட்டிருக்கிறது என்பதெல்லாம் நாங்கள் அடிக்கடி வலியுறுத்திக் கூறி வருகின்றபடி வடக்கு வளர்கிறது, தெற்கு வஞ்சிக்கப்படுகின்றது என்பதற்கு எடுத்துக்காட்டாக அமைந்திருக்கிறது என்பதை என்னால் விளக்கிச் சொல்லமுடியும். நடுத்தர துறைமுகங்கள் அபிவிருத்திக் குழு தூத்துக்குடி துறைமுகத்தையும் மங்களூர் துறைமுகத்தையும் அபிவிருத்தி செய்வதற்கு பத்து கோடி ரூபாய் திட்டத்திலே சிபாரிசு செய்தது. அதன் மேல் டாக்டர் சப்பராயன் அவர்களை அமைச்சராகக் கொண்ட அந்த இலாகா பதினைந்து கோடி ரூபாயில் இவைகளை அபிவிருத்தி செய்யவேண்டுமென்று சிபாரிசு செய்தது. ஆனால் திட்டக்குழு அந்நியச் செலாவணி வசதி இல்லாமையால், பண வசதி இல்லாமையால், இப்போது இவைகளை எடுத்துக்கொள்வதற்கில்லை என்று ஒத்தி வைத்திருக்கிறது. இதிலே நாம் கவனிக்கவேண்டியது, தூத்துக்குடியும் மங்களூரும் மாத்திரம் அந்நியச் செலாவணி இல்லாமையினால் ஒத்தி வைக்கப்பட்டுள்ளதா, அல்லது வேறு பகுதியில் இருக்கக் கூடியவைகளும் ஒத்தி வைக்கப்பட்டுள்ளதா என்று. அப்படிப் பார்த்தால் வேறு ஒன்றும் இல்லை. கல்கத்தா அருகிலே ஹால்டா என்ற துறைமுகத்தை அபிவிருத்தி செய்ய இதே திட்டக்குழு இருபத்து ஐந்து கோடி ரூபாய் ஒதுக்கி, ஹால்டா துறைமுக அபிவிருத்திக்காக வேண்டி இந்த இரண்டு துறைமுகங்களின் அபிவிருத்தியைக் கைவிட்டிருக்கிறதே தவிர வேறு அல்ல. அது மாத்திரமல்லாமல் கட்ச் வளைகுடாப் பகுதியில் இருக்கின்ற கண்ட்லா துறைமுகத்தை, முக்கால் சதா மைலுக்கு அதை "ஃப்ரீ போர்ட்"-ஆக அபிவிருத்தி செய்ய அரசாங்கம் தீவிரமாக ஈடுபட்டிருக்கிறது. அந்த கட்ச் வளைகுடா பகுதி—கண்ட்லா பகுதி—கள்ளக் கடத்தலுக்குப் பெயர்போன இடம். அந்த மாதிரியான இடத்தை "ஃப்ரீ போர்ட்"-ஆக இந்த அரசாங்கம் ஆக்குகிறது என்று சொன்னால், மேலும் மேலும் கள்ளக் கடத்தல் அதிகரிக்க வசதி ஏற்படும். அந்தத் துறைமுகத்தையும், கல்கத்தாவிற்கு அருகில் இருக்கும் துறைமுகத்தையும் அபிவிருத்தி செய்ய வேண்டி, தெற்கே இருக்கின்ற மங்களூரும், தூத்துக்குடியும் கைவிடப்படுகிறது என்று சொன்னால், இதை வடக்கால் தெற்கு வஞ்சிக்கப்படுகிறது என்று சொல்லாமல் வேறு எந்த வார்த்தைகளால் சொல்வது என்று நீங்களே எண்ணிப் பார்க்க வேண்டும். அது மாத்திரமல்ல. அமைச்சர் அவர்கள்

சொன்னார்கள், "நான் மங்களூரைப்பற்றிச் சொல்லவில்லை. தூத்துக்குடியைப் பற்றித்தான் சொன்னேன்" என்று. இதிலே அமைச்சர் அவர்களுடைய கண்ணோட்டம் சரிவர இல்லை என்று குற்றம் சாட்ட விரும்புகிறேன். தூத்துக்குடி எந்த அளவுக்கு முக்கியத்துவம் வாய்ந்ததோ அந்த அளவுக்கு மங்களூரும் முக்கியம் என்று நான் சொல்வேன். காரணம், மங்களூரைச் சுற்றி இரும்பு தாது இருக்கிறது. சிட்டல்துர்க் மாவட்டத்தில் மாத்திரம் வருடம் ஒன்றுக்கு இருபது லட்சம் டன் இரும்பு தாது —வெளி நாட்டுக்கு ஏற்றுமதி செய்யக்கூடிய அளவுக்கு— இருக்கிறது. அந்த மாவட்டத்தில் இருக்கக்கூடிய இரும்பை எடுத்து மங்களூருக்குக் கொண்டுவர ஹஸனிலிருந்து மங்களூருக்கு ரயில் பாதை போடவேண்டும். ஹஸன், மங்களூரிலிருந்து 120 மைல் தூரத்திலிருக்கிறது. இந்த ரயில் பாதையைப் போட்டால் வருடம் ஒன்றுக்கு இருபது லட்சம் டன் இரும்பு தாதுவை வெளிநாட்டுக்கு ஏற்றுமதி செய்யமுடியும்; அதனால் நமக்கு வேண்டிய அந்நியச் செலாவணி கிடைக்கும். இந்த ரயில் பாதையைப் போடாவிட்டால் 8-ல் ஒரு பங்கைக்கூட ஏற்றுமதி செய்யமுடியாது. இந்த அளவுக்கு இதைப் பற்றி ஆராய்ச்சி செய்தவர்கள் சொல்லியிருக்கிறார்கள். அது மாத்திரமல்லாமல், "திட்டக் கமிஷன்கூட ரூபாய் ஸாங்ஷன் செய்யவேண்டாம்", அந்த மாவட்டத்திலுள்ள இரும்பை எடுத்து செய்கிறவர்கள் "நாங்கள் பணம் தருகிறோம்" என்று முன் வந்திருக்கிறார்கள். ரயில்வே போர்டு . . . . . . . .

THE HON. SRI R. VENKATARAMAN : எவ்வளவு பர்ஸெண்ட் இரும்பு கண்டெண்ட் என்று சொல்லமுடியுமா?

SRI A. V. P. ASAITHAMBI : என்னால் திட்டவட்டமாக, புள்ளிவிவரத்தோடு சொல்ல இயலாது. ஆனால் நடுத்தர துறைமுகங்கள் அபிவிருத்திக் குழுவைச் சேர்ந்த அங்கத்தினர் ஒருவர் இதைப் பற்றித் தெளிவாகக் கூறியிருக்கிறார். அது மாத்திரமல்லாமல் மேற்கு ஜெர்மனியிலிருந்தும், இத்தாலியிலிருந்தும் இரும்புப் பாதை போட பண உதவி பெறமுடியும் என்று அபிவிருத்தி போர்டு அங்கத்தினர் ஒருவரே வெளியிட்டிருக்கிறார். இது எல்லா பத்திரிகைகளிலும் வெளி வந்திருக்கிறது.

THE HON. SRI C. SUBRAMANIAM : மங்களூரைப் பற்றி "ஆர்க்யூ" பண்ணிக்கொண்டிருக்கிறீர்களா?

SRI A. V. P. ASAITHAMBI : இரண்டையும் சேர்த்துப் போட்டிருக்கிறபடியால் இரண்டையும் சேர்த்துப் பேசுகிறேன். கைவிடுவதற்கு காரணம் ஹால்டா துறைமுகத்தை அபிவிருத்தி செய்வதற்கு எடுத்துக் கொண்டதுதான். அமைச்சர் அவர்கள் நிச்சயமாக தூத்துக்குடி துறைமுகம் அபிவிருத்திக்கு எடுத்துக்கொள்ளப்படும் என்று சொல்லமுடியுமானால் அவர் உறுதி மொழி கொடுக்கட்டும். திட்டக் குழு கைவிட்டாலும் எப்படியாவது இதை நாங்கள் சேர்த்துக் கொள்ள ஏற்பாடு செய்கிறோம் என்று இந்த மன்றத்தில் சொன்னால் அதை நாங்கள் வரவேற்கத் தயாராக இருக்கிறோம்.

[Sri A. V. P. Asaithambi] [9th August 1960

அந்த அளவுக்கு நம் அரசாங்கம் நடப்பதாக இருந்தால் நிச்சயமாக இந்த தெற்கு புறக்கணிக்கப்படுகிறது என்ற குரல் இவ்வளவு அதிகமாக வந்திருக்க முடியாது. ஆனால் இந்த மந்திரி சபை தெற்கு வடக்கினால் வஞ்சிக்கப்படாமல் இருக்க—மேலும் மேலும் வஞ்சிக்கப்படாமல் இருக்க—அந்த அளவுக்குத் துணிந்து கேட்பதாக இல்லை என்று இந்த மன்றத்திலே சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

இந்த விஷயத்தில் மாத்திரமல்லாமல், மொழி விஷயத்தை எடுத்துக்கொள்வோம். பண்டித நேருவின் உறுதி மொழிக்குப் பிறகு இந்தியும் ஆங்கிலமும் காலவரையறையின்றி நீடிக்கும் என்று வந்துவிட்டது. இது எல்லோரும் ஏகமனதாக ஒப்புக் கொண்டது. ஆனால் இந்தியும் ஆங்கிலமும் காலவரையறையின்றி நீடிக்கும் என்ற நிலை இருக்கும்போது இந்தி மொழியை ஒவ்வொரு துறையிலும் புகுத்தவேண்டிய அவசியம் என்ன? இந்தி மொழியை அடிப்படையாகக் கொண்டதாக சகாப்தத்தைப் புகுத்த வேண்டிய அவசியம் என்ன? இந்தி நிர்வாக மொழியாக இருக்க வேண்டிய அவசியம் என்ன? இந்தி பேசப்படாத—தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகிய பகுதிகளில் இந்தி மொழிக்கு வேலை கிடையாது. அது திணிக்கப்படக் கூடாது. எந்த ரூபத்திலும் வரக்கூடாது. அதைத் தடுக்க இந்த அரசாங்கம் முன்வர வேண்டும். முன்வருமா வராதா என்ற சந்தேகம் எனக்கு இல்லை—மத்திய அமைச்சர் டாக்டர் சுப்பராயன் அவர்களே சென்னை அமைச்சர்களைப் பற்றி கடிந்து குறைந்து கொண்டிருப் பதை அமைச்சர்களின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்பு கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : அவர் தமிழ் போதனை மொழியாக வரக் கூடாது என்று சொல்லியிருக்கிறார். அதை நீங்கள் ஆதரிக்கிறீர்களா?

SRI A. V. P. ASAITHAMBI : தமிழ் போதனை மொழியாக ஆகவேண்டுமென்பதில் அமைச்சருக்கு இருக்கின்ற அக்கரை எனக்கு உண்டு. இன்னும் சொல்லப் போனால் தமிழ் மொழி சொல்லிக் கொடுக்கக் கூடியவர்களை கல்லூரிகளிலும், ஹைஸ்கூல் களிலும் தலைமை ஆசிரியர் நிலைக்கு உயர்த்தினால் தமிழ் மொழி யின் நிலையும் தானாக உயரும் என்று கூடச் சொல்வேன். அமைச் சருக்கு இருக்கக்கூடிய அக்கரை எனக்கும் உண்டு—அதில் கொஞ் சம் கூடக் குறைவு இல்லை. டாக்டர் சுப்பராயன் அவர்கள் அதே அறிக்கையில் சொல்லியிருக்கிறார், "எவ்வளவோ சொன்னாலும் கூட இந்தி வெறியர்கள் இந்தியைப் புகுத்துவதைத் தடுக்க முடியவில்லை. இதை சென்னை அமைச்சர்களின் கவனத்திற்குக் கொண்டு வருகிறேன்" என்று. 1965-ம் ஆண்டு வரையில் இந்தி, ஆங்கிலம் ஆகிய இரண்டு மொழிகளும் உண்டு, அதற்குப் பிறகும் இரண்டு மொழிகளும் உண்டு என்ற நிலை இருந்தும் மைல் கற்களில் ஏன் இந்தியில் போடப்படுகிறது? ஏன் போட அனுமதித்திருக் கிறீர்கள்? உத்தரவு இல்லாமல் அடுத்தவர்கள் போட அவர்

9th August 1960] [Sri A. V. P. Asaithambi]

களுக்கு என்ன அதிகாரம் இருக்கிறது? இதை ஏன் தடுக்கக் கூடாது? அற நிலைய இலாகாவிற்கு ஒரு "சர்க்குலர்" போகிறது இந்தி மொழி சம்பந்தமாக வேண்டிய நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று. கோவில்களைப் பராமரிக்கக் கூடிய இந்த இலாகாவில் இந்தி மொழி என்? எந்த உருவத்திலும் இந்தி இங்கே நுழையக் கூடாது. இந்தி புகுத்தப்படுவதை திராவிட முன்னேற்றக் கழகம் கடைசி மூச்சு வரையில் எதிர்க்கும் என்று இந்த மன்றத்தில் கூறிக்கொள்ள ஆசைப்படுகிறேன். இந்த அளவுக்கு இந்த ஆட்சியினர் வட நாட்டுக்காரர்கள் என்ன சொன்னாலும் வளைந்து கொடுக்கிறது என்ற நிலையில் போவதால் நாம் இந்த நிலைமையில் பின் தங்கியிருக்கிறோம்.

கவர்னர் உரையில் விலைவாசியை கட்டுப்படுத்த முடியவில்லை என்று வருத்தத்தைத் தெரிவித்திருக்கிறார்கள். நாங்கள் தேர்தலின் போதே சொன்னோம். "நாட்டு வாட்டம் போக்கிட நோட்டடித்தால் போதாது" என்று சொன்னோம். மந்திரி சுப்பிரமணியம் அவர்கள் நினைத்திருக்கலாம், ஏதோ எதுகை மோனைக்காக அவ்வாறு போட்டிருக்கிறார்கள் என்று. நாங்கள் அன்று சொன்னதை நீங்கள் இன்று பார்க்கிறீர்கள். இன்று உள்ள நிலைமை என்ன? அரசாங்கம் நோட்டு அடித்தது. அதோடுகூட, எட்டணா நாணயம், ஒரு ரூபாய் நோட்டு, ஐந்து ரூபாய் நோட்டு, நூறு ரூபாய் நோட்டு ஆகியவை அச்சடிப்பது இன்று ஒரு குடிசைத் தொழில் போல் சர்வசாதாரணமாக நடந்து வருகிறது. இவ்வாறு நடப்பதற்குக் காரணம் என்ன? இதையெல்லாம் தடுக்க அரசாங்கம் இல்லையா? போலீஸ் இலாகா இல்லையா? இந்த மாதிரி கள்ள நோட்டுகள் அச்சடிப்பவர்களைத் தடுப்பதற்கு ஏன் ஒரு தனி இலாகாவையே ஏற்படுத்தக்கூடாது? இந்த அளவுக்கு நோட்டுகள் அரசாங்கத்தால் அச்சடிக்கப்படுவதோடு கூட கள்ள நோட்டுகளும் அச்சடிக்கப்படுவதால் பாதிக்கப்படுவோர் இந்த மந்திரிகள் அல்ல. ஏழை மக்கள்தான் இதனால் பெரிதும் பாதிக்கப்படுகிறார்கள். இந்தமாதிரி கள்ள நோட்டு வழக்குகள் நாளுக்கு நாள் வளர்ந்து வருவதற்குக் காரணம் என்ன? ஒன்று, போலீஸ் இலாகா சரிவர இயங்காமல் இருக்க வேண்டும், அல்லது போலீஸ் இலாகாவில் யாருடைய தலையீடாவது இருக்க வேண்டுமென்று சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன். இந்தக் கள்ள நோட்டு வழக்கிலே பெரும் புள்ளிகள் எல்லாம் இருக்கிறார்கள். ஆளும் கட்சியைச் சேர்ந்த மண்டல காங்கிரஸ் கமிட்டித் தலைவர்கள் எல்லாம் ஈடுபட்டிருக்கிறார்கள்.

இந்த நாட்டின் பொருளாதாரம் சரியானபடி முன்னேற வேண்டுமானால் திராவிட முன்னேற்றக் கழகத்தவராகிய நாங்கள் சொல்லுகிற வார்த்தைகளை வைத்துக் கொண்டு மத்திய சர்க்காரிடத்தில் போய் என்னென்ன காரியங்களை நாம் கேட்க வேண்டுமோ அந்த அளவுக்குக் கேட்டு, போராடிப் பெற வேண்டும். இந்த அமைச்சரவையானது மற்ற மாநில அமைச்சரவைகளைவிட பெயர் பெற்ற மதிப்புள்ள, கெட்டிக்காரத்தனமான அமைச்சரவை என்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். இவர்கள் ஒவ்வொரு துறையிலும் நம்முடைய உரிமையை வற்புறுத்திச்

சண்டை போட்டுப் பெறுவதற்கு முயற்சிக்கவேண்டும். இவர்கள் அந்த அளவுக்கு முயற்சி எடுத்திருப்பார்கள் என்று சொன்னால் தூத்துக்குடித் துறைமுக விஸ்தரிப்புத் திட்டம் இந்த மூன்றாவது திட்டத்திலே சேர்க்கப்பட்டிருக்கவேண்டும். இனி யாவது இந்த அமைச்சரவை அந்தத் திட்டத்தைச் சேர்க்க முன் வரவேண்டுமென்று கேட்டுக்கொண்டு எனக்கு இந்த அவகாசம் கொடுத்த தலைவருக்கு நன்றி தெரிவித்துக்கொண்டு என்னுடைய பேச்சை முடித்துக்கொள்ளுகிறேன். வணக்கம்.

* **Sri V. ARUNACHALA THEVAR :** தலைவர் அவர்களே, கடந்த 5-ம் தேதியன்று நமது மேன்மை தங்கிய கவர்னர் பெருமான் அவர்கள் நிகழ்த்திய உரையை நான் வரவேற்று சில வார்த்தைகளை இங்கே சொல்ல ஆசைப்படுகிறேன். அதிலே நமது கவர்னர் பெருமான் அவர்கள் மத்திய அரசாங்கத்தின் வேலை நிறுத்தத்தைக் குறித்தும், அதைப் பொதுமக்களின் ஒத்துழைப் புடன் சமாளித்தது குறித்தும் தன் நன்றியைக் குறிப்பிட்டிருக் கிறார்கள். இந்த வேலை நிறுத்தத்தின் காரணமாக அரசாங்கத் திற்கு இக்கட்டை விளைவிக்கிறார்கள் என்று பொதுமக்கள் பொங்கி எழக்கூடிய நிலையில் இருந்தார்கள். அந்தச் சமயத்தில் நமது போலீஸ் உத்தியோகஸ்தர்கள் பொதுமக்களிடத்தில் நிலைமையை விளக்கி அவர்கள் எந்தவித கலகத்திலும் ஈடுபடா வண்ணம் பாதுகாத்தார்கள்.

நம்முடைய ராஜ்யத்திலே உள்ள மாகாண அரசாங்க ஊழியர் கள் எந்த வீட்டிலே வசிக்கிறார்களோ அதே வீட்டிலே மத்திய அரசாங்க ஊழியர்கள் வசிக்கிறார்கள். அவர்கள் எந்த இலாகா களில் வேலை செய்து வருகிறார்களோ அதே இலாகாக்களின் பக்கத்தில் அதே மாதிரி வேலையைச் செய்து கொண்டு, குறைந்த சம்பளத்தை வாங்கிக் கொண்டு வந்தார்கள். ஆனால் அவர்கள் தங்களுடைய குறைகளை தங்களுடைய தலைவர்கள் மூலமாக ராஜ்ய அரசாங்கத்திற்கு எடுத்துச் சொன்னார்கள். இப்போது அரசாங்கம் அவர்களுடைய சம்பளத்தை உயர்த்தியிருக்கிறது. இவ்வாறு ஊழியர்கள் வேலை நிறுத்தத்தில் ஈடுபடாது நல்ல முறையிலே தங்களுடைய கோரிக்கைகளை அரசாங்கத்திடம் எடுத்துச் சொல்லி தங்களுடைய தேவைகளைப் பெற்றுக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, திருத்தணி தாலூகா நம்முடைய ராஜ்யத் தோடு எப்ரல் 4-ந் தேதியன்று இணைந்தது குறித்து கவர்னர் பெருமான் அவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள். அந்த மக்கள் நம்முடைய ராஜ்யத்துடன் இணைந்திருப்பதை நாம் வரவேற் கிறோம்.

நமது மாகாணத்தில் அநேக ஜில்லாக்களில் பருவ மழை விட்டு விட்டுச் சில இடங்களில் பெய்திருக்கிறது என்று கவர்னர் பெருமான் குறிப்பிட்டிருக்கிறார். குறிப்பாக, புதுக்கோட்டை பிராந்தியத்தில் கடந்த மூன்று வருஷங்களாக பருவ மழை சரியாக இல்லாத காரணத்தால் ஏரிகளெல்லாம் பெருகவில்லை. அதன் காரணமாக அங்குள்ள மக்கள் பஞ்சத்தால் வாடுகிறார்கள்.

9th August 1960] [Sri V. Arunachala Thevar]

புதுக்கோட்டைப் பிராந்தியத்தில் உள்ள காட்டாறுகளான அக்கினியாறு, வெள்ளாறு, பாம்பாறு, கோரையாறு போன்ற வற்றில் சிறு சிறு அணைக்கட்டுகளைக் கட்டி அதன் மூலம் அங்கு மழை காலத்தில் மழை பெய்து வெள்ளமாக ஓடக்கூடிய தண்ணீரைத் தேக்கி பாசனத்திற்குப் பயன்படுத்த வழிசெய்து கொடுக்கவேண்டுமென்று கடந்த 10 ஆண்டுகளாக நாங்கள் எடுத்துக் கூறி வந்திருக்கிறோம். ஆனால் இதுவரை அந்தத் திட்டங்கள் எதுவும் எடுத்துக்கொள்ளப்படவில்லையென்பதை நான் வருத்தத்தோடு சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். இந்த அரசாங்கம் காவேரித் தண்ணீரைக் கொடுக்க முன்வராவிட்டாலும் அந்தப் பகுதியிலுள்ள காட்டாறுகளில் சிறு சிறு அணைகளைக் கட்டி விவசாயிகளுக்கு நல்ல முறையிலே உதவி புரியக் கூடிய வகையில் அந்தத் திட்டங்களை நிறைவேற்றவேண்டுமென்று கேட்டுக் கொள்ளு கிறேன். ஆனால், பக்கத்தில் ஓடக்கூடிய காவிரி ஆற்றின் தண்ணீர் ஜெயங்கொண்டத்திலிருந்து புதுக்கோட்டைக்கு வரக் கூடிய வசதி இருக்கிறது என்று பன்முறை இங்கே எடுத்துச் சொல்லியும், அனேக முறைகளில் அரசாங்கத்திற்கு மனுக்கள் சமர்ப்பித்தும், எந்த விதமான அக்கறையும் காட்டவில்லையே என்ற செய்தியை நான் இங்கு வருத்தத்துடன் சொல்லிக்கொள் கிறேன். காவிரி விஷயமாக பிரிட்டிஷ் அரசாங்கம் சென்னை அரசாங்கத்தோடு செய்துகொண்ட ஒப்பந்தத்தின்படித்தான் இப் பொழுது நமக்கு மைசூர் அரசாங்கத்தார் தண்ணீர் விட்டுக் கொடுக்கிறார்கள் என்று நினைக்கிறேன். ஆனால், சமீப காலத்திலே கட்டளைக் கால்வாய், புள்ளம்பாடிக் கால்வாய் இவைகள் வெட்டப் பட்டதன் காரணமாக அவர்களுடைய அனுமதி இல்லாது மேற் படி கால்வாய்கள் வெட்டப்படுகிறதாக மைசூர் அரசாங்கம் தக ராறு சொல்லியதாகப் பத்திரிகையிலே பார்த்தோம். ஆனால், மைசூர் அரசாங்கத்திடம் பிரிட்டிஷ் அரசாங்கம் ஒப்பந்தம் செய்துகொண்ட முறைப்படியே அவர்கள் விடும் தண்ணீரை நாம் எடுத்துக் கொள்ளுகிறோமே தவிர, நாம் போய் அவர்களுடைய தேக்கத்திலிருந்து தண்ணீரைத் திறந்துவிடும் அதிகாரம் இல்லை என்று நினைக்கிறேன். பிரிட்டிஷ் அரசாங்கம் எந்த விதத்தில் ஒப்பந்தம் ஏற்படுத்திக் கொண்டார்களோ அந்த பிரகாரமே மைசூர் அரசாங்கம் நமக்குத் தண்ணீர் விட்டுக் கொடுக்கிறது என்று நான் நினைக்கிறேன். ஆனால் நமக்கு விடக்கூடிய தண்ணீரை நாம் எந்த விதத்தில் பயன்படுத்தினால் அவர்களுக்கு என்ன என்று எனக்கு விளங்கவில்லை. மைசூர் அரசாங்கம் சொல்லும் தகராறு என்ன என்பதை நான் அறிய ஆசைப்படு கிறேன். ஆனால், அந்த அரசாங்கம் கொடுக்கும் தண்ணீரை நாம் எந்த விதத்தில் உபயோகப்படுத்தினாலும் அவர்கள் அதைப்பற்றி அக்கறை எடுக்கவேண்டியதில்லை என்று என் சிற்றறிவுக்கு எட்டிய வாறு நான் சொல்ல விரும்புகிறேன். அதிலே இப்பொழுது திருச்சி ஜில்லாவிலிருந்து கட்டளைக் கால்வாய் வல்லம் வரையில் போய்க் கொண்டிருக்கிறது. வல்லத்திலுள்ள லெவலைப் பார்த்து அங்கி ருந்து புதுக்கோட்டைப் பிராந்தியம் ஆலங்குடி தாலூகாவிலுள்ள 11-00 a.m.

[Sri V. Arunachala Thevar] [9th August 1960

மாங்காடு வரையில் தண்ணீர் போவதுபற்றி பரிசிலனை செய்யப்படுகிறதாக அறிகிறேன். அதையும் அரசாங்கம் கவனித்து நடத்தவேண்டுமென்று சொல்ல விரும்புகிறேன்.

புதுக்கோட்டைப் பிராந்தியத்தில் அடிக்கடி பஞ்சம் ஏற்படுவதினால் மக்கள் மிகவும் பாதிக்கப்படுகிறார்கள். மணப்பாரையிலிருந்து அரந்தாங்கி வரையிலும், புதுக்கோட்டையின் மூன்று தாலுகாக்களிலும் கடந்த மூன்று வருஷங்களாக பஞ்சத்தால் மக்கள் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். இப்பொழுது சமீபத்தில் பெய்த மழையின் காரணமாக, ஏரிகளில் 10, 15 நாட்கள் பாயக்கூடிய தண்ணீர்தான் விழுந்திருக்கிறது. அதை நம்பி விவசாயிகளெல்லாம் விதைக்க ஆரம்பித்து விட்டார்கள். ஆனால், பிற்காலத்தில் அவர்கள் எப்படி சாகுபடிக்குக் கொண்டுவரமுடியும் என்பதை என்னால் சொல்ல முடியவில்லை.

தொழிற்சாலைகளைப் பரவலாக அமைக்கவேண்டுமென்று கவர்னர் பெருமான் தம்முடைய உரையில் குறிப்பிட்டிருக்கிறார்கள். எங்கள் புதுக்கோட்டைப் பிராந்தியத்தில் கடந்த மூன்று வருஷங்களாக ஏற்பட்ட பஞ்சத்தின் காரணமாக குளங்களில் தண்ணீர் இல்லாததால் கிணறுகளிலிருந்து தண்ணீர் எடுத்து கரும்பு சாகுபடி செய்து வருகிறார்கள். சென்ற வருஷம் ஒரு ஏக்கர் கரும்பு சாகுபடி செய்தவர்கள் இந்த வருஷம் இரண்டு, மூன்று ஏக்கர் சாகுபடி செய்திருக்கிறார்கள். அந்தப் புதுக்கோட்டைப் பகுதியில் ஒரு கரும்பு ஆலை நிறுவினால் அதைக் கொண்டாவது மக்கள் நல்ல முறையிலே கரும்பு சாகுபடியை விருத்தி செய்யக்கூடும் என்று சொல்லிக்கொள்கிறேன்.

புதுக்கோட்டையை ஒரு தனி ஜில்லாவாக ஆக்கவேண்டும் என்று எத்தனையோ முறை இந்த சட்டமன்றத்திலே என்போன்ற சில அங்கத்தினர்கள் எடுத்துச் சொல்லியும் அரசாங்கம் அதைக் கவனிக்கவில்லை. ஆனால், திருச்சி போன்ற பெரிய ஜில்லாவில் ஒரே இடத்தில் அனேக வேலைகளைக் குவியல் குவியலாக வைத்து, அனேக உத்தியோகஸ்தர்களை அங்கே நியமித்திருக்கிறார்கள். புதுக்கோட்டையில் நல்ல கட்டிடங்களிருக்கின்றன. (அக்கிராசனர் மணி அடித்து அடுத்த அங்கத்தினரைப் பேசக் கூப்பிட்டார்.)

* **Srimathi P. K. R. LAKSHMIKANTHAM** : தலைவர் அவர்களே, மதிப்பிற்குரிய நமது கவர்னர் பெருமான் அவர்கள் நிகழ்த்திய பேருரையானது நம்முடைய லட்சியங்களெல்லாம் பிரதிபலிக்கக் கூடிய முறையிலே இருக்கிறது என்பதை அறிய மிகவும் மகிழ்ச்சியடைகிறேன்.

சென்னை சம்பளக் கமிஷன் செய்த சிபார்சுகள் அனைத்தையும் நம்முடைய சர்க்கார் ஏற்றுக்கொண்டு ஜூன் மாதம் 1-ந் தேதி முதல் அவைகளை அமுல் செய்திருப்பதானது மிகவும் மகிழ்ச்சியை ஊட்டுவதாக இருக்கிறது. நம்முடைய சர்க்கார் பணியாளர்களும், உபாத்தியாயத் தொழில் செய்கிறவர்களும் இதனால் மிகுந்த திருப்தி அடைந்திருக்கிறார்கள் என்பதை நான் இந்த இடத்திலே குறிப்பிட விரும்புகிறேன்.

9th August 1960] [Srimathi P. K. R. Lakshmikantham]

இருந்தாலும்கூட, இந்தத் திருப்தியானது எதுவரையிலும் நீடித்திருக்கும் என்பதைச் சொல்ல முடியாது. காரணம், உணவுப் பொருள்கள் அனைத்தும் மிகவும் விலை ஏறிக்கொண்டே செல்கிறது. அவைகளைக் கட்டுப்படுத்தாத வரையில், எவ்வளவு அதிகம் நாம் சம்பளம் கொடுத்தாலும், எவ்வளவு அதிகமாக எல்லாவித நலன்கள் செய்து கொடுத்தாலுங்கூட மக்கள் திருப்தி அடைவதற்கு ஏதுவாக இருக்கமுடியாது என்பதைத்தான் நான் நினைவூட்ட விரும்புகிறேன். உணவுப் பொருள்களின் விலை கூடுதல் காரணமாக ஏழைகள் மட்டுமல்ல, நடுத்தர வகுப்பினர்கள் மிகுந்த தொல்லைக்கு ஆளாகியிருக்கிறார்கள் என்பதை நாம் நினைவுபடுத்திக்கொள்ள வேண்டும். சர்க்கார் காரியாலயங்களில் வேலைசெய்யும் பணியாளர்கள் தங்களுக்குச் சம்பளம் போதவில்லை என்று தெரிவித்துக்கொள்ள முடிகிறது. ஆனால், அன்றாடம் வேலை செய்து பிழைக்கும் கூலி ஆட்களும், மாதத்திற்கு இவ்வளவு தான் சம்பளம் என்று நிர்ணயிக்கப்பட்டு வேலையில் ஈடுபட்டிருக்கிறவர்களும் மாதா மாதம் தங்களுக்குச் சம்பளம் கிடைப்பது போதவில்லை என்று அதிகம் கேட்பார்களானால், அவர்கள் வேலையிலிருந்து நீக்கப்படுவார்கள். அதன் காரணமாக, தமக்கு ஏற்பட்டிருக்கும் அந்தக் கஷ்டத்தையும் சொல்லிக்கொள்ள முடியாத நிலையிலே உணவுப் பொருள்களின் விலை ஏற்றத்தின் காரணமாகத் துன்பப்படுகிறார்கள். ஆகையால், நம்முடைய சர்க்கார் உணவுப் பொருள்களின் விலையிலே மிகவும் கவனம் செலுத்தி அதைக் கட்டுப்படுத்த வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகின்றேன்.

நெய்வேலியில் ரசாயன உற்பத்தித் தொழிற்சாலை நிறுவுவது குறித்து மிகுந்த துரிதமாக ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன என்பது மிகவும் மகிழ்ச்சி அடையக்கூடிய விஷயம். ஏனென்றால், விவசாயம் உரத்தை நம்பித்தான் செய்ய முடிகிறது. அந்த உரம் சரியான முறையில் கிடைப்பதில்லை என்ற காரணமாக பலர் அதிகமான விளைச்சல் ஏற்படுத்த முடியாமல் இருக்கிறார்கள். ஆகையால், இம்மாதிரியான ஒரு ரசாயன உரச்சாலை நம்முடைய மாகாணத்தில் இருக்குமானால், அதனால் நம்முடைய விளைச்சலை நாம் அதிகப்படுத்த முடியும் என்பதை அறிந்து நான் மகிழ்ச்சி அடைகின்றேன். அதில் இன்னும் தீவிர கவனம் செலுத்தி ரசாயன உரத் தொழிற்சாலையை மிக சீக்கிரத்திலே ஏற்படுத்தவேண்டுமென்று நான் சொல்கிறேன்.

அடுத்தபடியாக, உணவுப் பொருள் விலையைப் போன்று மோட்டா ரக நூல் விலை ஏறிக்கொண்டே செல்கிறது. மோட்டா ரக நூலை நெசவு செய்து பிழைக்கும் நெசவாளிகள் இதனால் மிகவும் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். அந்தத் தொழிலைச் செய்து பிழைக்கின்றவர்களும் அதனால் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். காரணம், எந்தப் பொருளும் அடக்க விலைக்கு அதிகமாக விற்பதுதான் வியாபாரம் என்று சொல்லப்படுகிறது. ஆனால், நூல் விலை ஏற்றத்தின் அளவிலே துணி விலை ஏறிக்கொண்டே போகுமானால்,

[Srimathi P. K. R. Lakshmikantham] [9th August 1960

இதனல் பாதகம் இல்லே; அந்தத் தொழிலில் ஈடுபடுகிறவர்களுக்கும் கஷ்டம் இருக்காது. அந்தத் தொழிலே நம்பி வாழ்கின்ற நெசவாளிகளுக்கும் கஷ்டம் இருக்காது. ஆனல், மோட்டா ரக நூலே வாங்கிச் செய்யும் பெட்ஷீட், டவல் போன்றவைகளே விலே அதிகமாக விற்க முடியாது. ஆகையால், இந்த நூல் விலே காரணமாக அந்தத் தொழில்கள் செய்கின்றவர்கள் அனேவரும் அந்தத் தொழிலே நிறுத்திவிடவேண்டுமென்ற அளவிலே அவர்கள் இருக்கிருர்கள். மதுரையைப் பொறுத்தவரையில் பலர் அந்தத் தொழிலே நிறுத்தியும் இருக்கின்றுர்கள். அவர்களிடத்திலே பல ஆயிரக்கணக்கான ரூபாய் பெறுமான ஸ்டாக்குகள் இருக்கிறபடியினல், மேற்கொண்டு நூலே வாங்கி நெசவாளிகளுக்குத் தொழிலேக் கொடுக்கவேண்டிய அளவுக்கு அவர்களுக்குச் சாதகம் இல்லாத காரணத்தினுலும் அந்தத் தொழிலே நிறுத்தியும் இருக்கிருர்கள். இந்த முறை ஏற்படுமேயானல் அதனல் பாதிக்கப்படுபவர்கள் முதலாவதாக நெசவாளர்கள் என்பதை நாம் நினேவுபடுத்திக் கொள்ளவேண்டும். இதற்காக பல மாதங்களுக்கு முன்பே முக்கூட்டு மகாநாடுகள் கூட்டப்பட்டன. பல தடவை நமது அமைச்சர் அவர்கள் மில் முதலாளிகளேக் கண்டு பேசியும் இருக்கிருர்கள். ஆனல் எந்த விதமான பலனும் இதுவரைக்கும் ஏற்படவில்லே என்பதைக் கண்டுதான் நான் வருந்தவேண்டியிருக்கிறது. ஆகையினல் உடனடியாக மோட்டா ரக நூல்களின் விலேயைக் கட்டுப்படுத்தும் நோக்கத்தைக் கொண்டு அதற்கு வேண்டிய ஏற்பாடுகளேச் செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

தொழில்களே நாம் இணக்கும்பொழுது கனரகத் தொழிற்சாலேகளே பல இடங்களில் ஏற்படுத்தியிருக்கிருேம். அந்தத் தொழிற்சாலேகளே ஏற்படுத்துவதற்கு நமக்கு மூலப் பொருள்கள் வேண்டியிருக்கிறது. மூலப் பொருள்கள் எங்கு கிடைக்கிறதோ அந்த இடங்களில் அந்தத் தொழிற்சாலேகளே ஏற்படுத்துவதுதான் நியாயம். ஆனல் அதிலிருந்து வருகிற உருக்குகளேக் கொண்டு நாம் ஏற்படுத்துகிற புதிய தொழிற்சாலேகளேப் பரவலான முறையிலே ஏற்படுத்தவேண்டும். தொழிற்சாலேகள் இல்லாத பகுதிகளிலே அந்தத் தொழிற்சாலேகளே ஏற்படுத்துவதன் மூலம் அந்தப் பகுதிகளிலே இருக்கிற மக்களுக்கு "நம்முடைய திட்டங்கள் ஓரளவில் பயன்பட்டு வருகின்றன. அதனல் நாமும் பலன் பெறுகிருேம்" என்கிற உணர்ச்சி ஏற்படும். நம்முடைய மாகாணத்தைப் பொறுத்தவரையிலே பிற்பட்ட பகுதிகள் பல இருக்கின்றன. அந்தப் பகுதிகளிலே பல தொழிற்சாலேகள் ஏற்படுத்துவதற்கு வேண்டிய யோசனேகளேச் செய்து அந்த வட்டாரங்களேப் போய்ப் பார்த்து, அந்தப் பகுதிகளில் தொழிற்சாலேகளே ஏற்படுத்தவேண்டுமென்று நான் மிகவும் வேண்டிக் கொள்ளுகிறேன்.

அது மாத்திரமல்ல. பல தொழில்கள் நடைபெற்று வருகின்றன. ஆனல் அந்தத் தொழில்கள் நன்கு நடைபெறுவதற்கு வேண்டிய நல்ல சூழ்நிலேயை நாம் உண்டாக்கித் தர வேண்டும். நம்முடைய நாடு சுதந்திர நாடு. சுதந்திர நாட்டிலே

9th August 1960] [Srimathi P. K. R. Lakshmikantham]

நல்ல முறையிலே தொழில்களைச் செய்து தொழில்களைப் பெருக்கு வதன் மூலம்தான் முன்னேற்றம் அடையவேண்டும் என்று கருதிச் செய்யப்படுகின்ற தொழில்களெல்லாம் பல சூழ்நிலை சரியாக அமையாததன் காரணமாக கெட்டுப்போய்விடுகின்ற நிலைமையும் இருக்கிறது. அவைகளையெல்லாம் சீர்தூக்கிப் பார்த்து அந்தப் பகுதியிலே நடக்கின்ற தொழில்கள் அனைத்தும் சீரான முறையிலே நடைபெறுவதற்கு வேண்டிய ஒத்தாசையும், அதற்கு வேண்டிய சூழ்நிலையையும் நம்முடைய சர்க்கார் ஏற்படுத்த வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

மின்சாரத்தைப் பொறுத்தவரையிலே நம்முடைய மாகாணம் மிகவும் முன்னேடியான நிலைமையில் இருக்கிறது என்பதைக் குறித்து எந்தவிதமான சந்தேகமும் இல்லை. நம்முடைய மதிப் பிற்குரிய கவர்னர் பெருமான் அவர்கள் உரையில் நல்ல முறையிலே நாம் படித்து அறிந்து இருக்கிறோம். இந்த ஆண்டு முடிவிற்குள்ளாக 10,000 கிராமங்களுக்கு நாம் மின்சாரத்தைக் கொடுக்க இருக்கிறோம். அடுத்த திட்டத்தின் இறுதிக்குள்ளாக அநேகமாக நம்முடைய மாகாணத்திலே எல்லா கிராமங்களுக்கும் நாம் மின்சாரம் சப்ளை செய்யக்கூடிய நிலைமையிலே இருக்கிறோம் என்று சொன்னால், நம்முடைய நாட்டிற்கே ஒரு வழிகாட்டியாக சென்னை மாகாணம் இருக்கிறது என்பதைப்பற்றி நாம் எல்லோரும் பெருமிதம் கொள்ளவேண்டும்.

விவசாயிகளுக்கு இன்னொரு பெருத்த நன்மையும் நம்முடைய மின்சார இலாகாவினால் ஏற்பட்டிருக்கிறது. அதாவது 'மினிமம் சார்ஜ்' இல்லை என்ற விஷயமானது விவசாயிகளுக்கு ஒரு பெருத்த மகிழ்ச்சியை ஊட்டுவதாக இருக்கிறது. விவசாயத்திற்கு வேண்டிய மின்சாரம் அவர்களுக்கு வேண்டிய அளவுக்கு உபயோ கப்படுத்திக்கொள்ளலாம், அவசியம் இல்லை என்று சொன்னால் அதற்கு குறைந்தபட்ச கட்டணம் கட்டவேண்டியதில்லை என்பதைக் குறித்தும் நாம் மகிழ்ச்சி அடையவேண்டும்.

(Mr. Speaker in the Chair.)

அண்மையிலே நடந்த வேலை நிறுத்தத்தைப்பற்றி பல அங்கத் தினர்கள் பேசினார்கள். உண்மையாகவே மத்திய அரசாங்க ஊழியர்களது வேலை நிறுத்தமானது நாட்டிற்கே அவர்கள் செய்த ஒரு பாதகச் செயல் என்று சொன்னால் அது மிகையாகாது என்றுதான் நான் கருதுகிறேன். ஏன் என்று சொன்னால், சர்க்காரைப் பயமுறுத்திப் பணியவைத்து விடவேண்டும் என்கின்ற ஒரு உள்நோக்கத்துடன் அவர்கள் வேலை நிறுத்தம் செய்தார்கள். வேலை நிறுத்தம் சர்க்காருக்கு எதிராகச் செய்யும் வேலை நிறுத்தம் என்று அவர்கள் மனதிலே எண்ணிக்கொண்டு செய்ததன் காரணமாகத்தான் அவர்கள் அந்த வேலை நிறுத்தத்தில் எந்தவிதமான வெற்றியும் அடைய முடியாமல் போக நேர்ந்தது. வேலை நிறுத்தமானது பொது மக்களுக்கு எதிராகச் செய்த வேலை நிறுத்தம் என்று சொன்னாலும் அது உண்மை என்றுதான் கொள்ளவேண்டும். ஏனென்று சொன்னால் மத்திய சர்க்கார் ஊழியர்கள் பலவிதமான காரியங்களில் ஈடுபட்டிருக்கிறார்கள். நாட்டிலே இருக்கின்ற மக்களுக்கு அன்றாட வாழ்க்கைக்கு அவசிய

[Srimathi P. K. R. Lakshmikantham] [9th August 1960

மான காரியங்கள் நடக்கின்ற இடங்களிலே, போக்குவரத்து போன்ற தொழில்களிலே மத்திய சர்க்கார் ஊழியர்கள் ஈடுபட்டிருக்கிறார்கள். அப்படிப்பட்ட தொழில்களில் ஈடுபட்டிருப்பவர்கள் செய்கின்ற வேலை நிறுத்தத்தினால் சர்க்காரைப் பயமுறுத்தி பணிய வைக்க முடியும் என்று எண்ணினதானது மிகவும் தவறு. அவர்கள் செய்த வேலை நிறுத்தம் பொது மக்களுக்கு எதிராகச் செய்த வேலை நிறுத்தம். ஆகையினால்தான் பொது மக்களுடைய ஆதரவின்றி அவர்கள் அந்த வேலை நிறுத்தத்திலே தோல்வியுற்றார்கள். இனிமேல் வரப்போகின்ற ஒரு காலத்தில் இது ஒரு நல்ல படிப்பினையாக இருக்கும் என்பதையும் நான் இந்த இடத்திலே குறிப்பாகச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

கடைசியாக, மொழி சம்பந்தமான விஷயத்திலே பலர் தங்களுடைய கருத்துக்களைத் தெரிவித்தார்கள். நேற்று பேசிய கனம் அங்கத்தினர் திரு. மகாலிங்கம் அவர்கள், இந்தி லிபிக்குப் பதில் ரோமன் லிபியே இருந்துவிட்டால் என்ன, அதனால் பலவிதமான சங்கடங்கள் நிவர்த்தியாகும் அல்லவா, என்பதைப்பற்றி அவர்கள் தங்களுடைய கருத்துக்களைத் தெரிவித்தார்கள். இந்தி மொழியை ரோமன் லிபியில் கற்பதைக் காட்டிலும் அந்தப் பிரதேச மொழியிலே இந்தியைக் கற்றுவிட்டால் என்ன என்கின்ற ஒரு பிரச்னையும் எழுவது சகஜம்தான். இந்த விஷயங்களையெல்லாம் சிந்தித்துப் பார்க்கும்பொழுது நாகர லிபியிலே இந்தியைக் கற்றுக்கொள்ளுவது மிகவும் முக்கியம் என்பதை நான் தெரிவித்துக்கொண்டு, அது இல்லையென்றால் அந்தந்தப் பிரதேச லிபியிலே இந்தி மொழியைக் கற்றுக்கொள்ளுவது அதைக் காட்டிலும் கொஞ்சம் சுலபமாக இருக்கும் என்று தெரிவித்துக் கொண்டு, நமது கவர்னர் பெருமான் அவர்களுடைய உரையின் மீது சில கருத்துக்களை தெரிவிப்பதற்கு ஒரு வாய்ப்பைப் பெற்றதற்கு நன்றியைத் தெரிவித்துக்கொண்டு, இந்த உரைக்கு என்னுடைய மகிழ்ச்சியையும் தெரிவித்துக்கொண்டு, முடித்துக் கொள்ளுகிறேன், வணக்கம்.

* **Sri K. SATTANATHA KARAYALAR**: கனம் சபா நாயகர் அவர்களே, கவர்னர் பெருமான் பேருரையின் ஆரம்பத்திலே மத்திய சர்க்கார் ஊழியர்களுடைய வேலை நிறுத்தத்தைப்பற்றி குறிப்பிடப்பட்டுள்ளது. இந்த சபையிலே பேசிய பல நண்பர்களும் வேலை நிறுத்தம் செய்தது சரியா, தவறு என்பதைப்பற்றி அபிப்பிராய வித்தியாசங்களை இருதரப்பிலும் எடுத்துச் சொன்னார்கள். ஆனால், அதே நேரத்திலே கவர்னர் பெருமான் பேருரையிலே வேலை நிறுத்தத்திற்கு காரணமாயிருந்த அம்சங்கள் நியாயமானவை என்பது சூசகமாக தெரியப்படுத்தப்பட்டிருக்கிறது. அதாவது விலைவாசி உயர்வு நாட்டிலே கூடிக்கொண்டே போகும் போது "பிக்ஸெட் இன்கம்",—நிர்ணயிக்கப்பட்ட வருமானம் உள்ளவர்கள் மேலும் மேலும் அதிகமாகக் கஷ்டப்படுகிறார்கள், அதைத் தெட்டத் தெளிவாகத் தேக்கி, அதிலே உள்ள குறைபாடுகளை நீக்க வழிவகைகளைச் செய்ய மத்திய சர்க்காருக்கும் சிபாரிசு செய்துள்ளோம் என்றும் குறிப்பிட்டு விட்டார்கள். மத்திய சர்க்கார்

9th August 1960] [Sri K. Sattanatha Karayalar]

ஊழியர்கள் கோருவதுபோல். விலைவாசி உயர்வுக்குத் தக்க பஞ்சப்படியையும் இணைத்து அவர்களுக்கு பஞ்சப்படியென்று ஒரு நியாயமான தொகையைக் கொடுக்கவேண்டும் என்பதை யாரும் மறுக்க மாட்டார்கள். விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்த வேண்டும் என்பதில் யாருக்கும் அபிப்பிராய பேதம் இல்லை. **ஆனால்**, கவர்னர் பெருமான் பேருரையில், விலைவாசியைக் கட்டுப் படுத்த என்ன என்ன நடவடிக்கைகள் எடுக்கப் போகிறார்கள் என் பதைப்பற்றி யாதொன்றும் குறிப்பிடப்படவில்லை. உண்மையாக விலைவாசிகளைக் கட்டுப்படுத்தி, அத்தியாவசியப் பொருள்களையும், உணவுப் பொருள்களையும் "லெவி" லிஸ்டப்படி எடுக்கவேண்டும் என்று சர்க்கார் கருதுகிறார்களா, "பாங்க்" முதலிய "பார்வர்ட் ட்ரேடிங் அட்வான்ஸ்"-களைக் கட்டுப்படுத்த வேண்டும் என்று சர்க்கார் கருதுகிறதா என்பதையெல்லாம்பற்றி எந்த விதமான சூசகமும் இல்லை. "பாங்க் டெபாசிட்" தொகைகள் "இன்ப்ளேஷன்" காரணமாக அதிகமாகியிருக்கிறது. அதற்கு ஒரு வரையறை கட்ட சர்க்கார் என்ன நடவடிக்கை எடுக்கப் போகிறது என்பதைப்பற்றி யாதொன்றும் குறிப்பிடப்படவில்லை.

அடுத்தபடியாக, நாட்டிலே, குறிப்பாக தமிழ் நாட்டிலே, மக்கள் உணர்ச்சியைத் தூண்டியிருக்கும், கவலைக்கு இடமாக விருக்கும் பிரச்னை, மொழிப் பிரச்னை. அது இங்கே மட்டு மல்ல. பஞ்சாபிலும், அஸ்ஸாமிலும், இது குழப்பத்தை பெரிய அளவுக்குக் கொண்டுபோய் விட்டிருக்கிறது. தமிழ் நாட்டைப் பொறுத்தமட்டும், நாம் இங்கே கையாளும் கொள்கை, நமது சர்க்கார் கையாளும் கொள்கை, ஓரளவு மக்களுக்கு திருப்தியாக இருந்தாலும், எல்லோருக்கும் சந்தேகமின்றிச் செய்யவேண்டுவது பற்றி மேலும் சிந்திக்க வேண்டிய விஷயம். அதே போன்று அகில இந்திய மொழி ரீதியில் கொள்கையிருந்தால் சரி. அங்கும் இங்கும் ஒரே கட்சியாக இருந்தாலும், கொள்கையில் வித்தியாசம் இருக்கிறதா, அப்படியானால், அந்தக் கட்சியின் கொள்கை என்ன? மொழியைப் பொறுத்தவரையில், வட்டார மொழி தாய் மொழிதான் என்பதில் எந்தவிதமான ஆட்சேபணையும் இல்லை. எந்தக் கட்சிக்கும் அபிப் பிராயபேதம் இல்லை. தமிழ் நாட்டிலே இன்று ஹிந்தியைப் பொறுத்தவரை துணைப்பாடமாகக் கொண்டுவரக்கூடிய ஏகோ பித்த அபிப்பிராயம் இருக்கிறது. சர்க்கார் ஒத்துக்கொள்கிறது. ஆனால், இதர மாகாணங்கள் அம்மாதிரி ஒத்துக்கொள்ளவில்லை. கல்லூரிகளில் போதனை மொழி சம்பந்தப்பட்ட மட்டில், தமிழ் போதனை மொழியாக 1963-க்குப் பிறகு பரிபூரண போதனை மொழியாக இருக்கும் என்கிற முடிவு வரவேற்கக்கூடிய விஷயம். அதே நேரத்தில், இதர மாகாணங்கள் அம்மாதிரியே முடிவு எடுக்க இருக்கின்றனவா? நாம் அகில இந்திய ரீதியில் ஹிந்தியை ஒத்துக் கொள்ளவில்லையென்றால், அதற்குப் பதிலாக எந்த மொழியை ஒத்துக் கொள்கிறோம்? தமிழ் அந்த நிலைக்கு வர முடியுமா என்பதில் ஐயப்பாடு உண்டு. ஆகவே, இன்று இருக்கும் ஆங்கிலத்தை தொடர்ந்து அகில இந்திய ரீதியில் ஏற்றுக்கொள்ள வழிவகைகள் செய்தாக வேண்டும். அதற்குத் திட்ட வட்டமாக வழிவகைகள் செய்தாக வேண்டும். கோயம்புத்தூர் கல்லூரியில்

[Sri K. Sattanatha Karayalar] [9th August 1960]

உள்ளது போல் இதர கல்லூரிகளிலும் தமிழே போதனு மொழியாகும் நேரத்தில், அகில இந்திய போட்டிகளில், நம் மாணவர்கள் எந்த முறையில் பங்கு எடுக்க முடியும், எப்படி அகில இந்திய வேலைகளுக்குப் போகமுடியும் என்பதையெல்லாம் நாம் சிந்திக்க வேண்டும். ஆங்கிலம் அறவே வேண்டாம் என்று சொல்லும் நண்பர்களும் இங்கேயே இருக்கிறார்கள்; கல்லூரிகளிலும் ஹிந்தி வரவேண்டும் என்று கருதும் நண்பர்களும், படிப்பாளிகளும் இருக்கிறார்கள். இரண்டும் மாறுபட்ட அபிப்பிராயங்கள். தமிழை மாத்திரம் போதனு மொழியாக வைத்தால், தமிழ் ஆட்சி மொழியாக இருப்பதால், நம் மாநிலத்தில் உத்தியோகத்திற்கு வருகிறவர்களுக்கு உபயோகமாகவிருக்கும். ஆனல், அது அகில இந்திய வேலைகளுக்கு எந்த அளவுக்குச் சாதகமாக இருக்கும் என்பதைப் பார்க்கவேண்டும். அப்படி வரும்போது, ஆங்கிலமே தொடர்ந்து இருக்கவேண்டும் என்று வரும். ஆகவே தமிழோடு கூட ஆங்கிலமும் இருக்கவேண்டுமா என்ற அவசியத்தைப்பற்றி சர்க்கார் பரிசிலனை செய்யவேண்டும். அண்மையிலே உள்ள மாநிலங்களைப் பொறுத்தவரை, கேரளத்தைப் பொறுத்த வரையில், பள்ளிக்கூடங்களில், கல்லூரிகளில், ஆங்கிலம் போதனு மொழியாக இருந்துவருகிறது. அந்த மாணவர்களோடு, நம் மாணவர்கள் அகில இந்திய ரீதியில் எப்படி ஆவார்கள் என்பதைச் சிந்திக்க வேண்டும். ஆகவே, "பாரலல்" ஆக, இரண்டும் சொல்லிக் கொடுக்கப்படவேண்டுமா என்பதைப் பரிசிலனை செய்ய வேண்டும். ஒரு கல்லூரிக்கு அதிகமாக இருக்கும் பெரிய நகரங்களிலாவது, ஒரு கல்லூரியிலாவது ஆங்கிலம் தொடர்ந்து போதனு மொழியாக இருக்கவேண்டியது சாலச் சிறந்ததாக இருக்காதா என்று சர்க்கார் பரிசிலனை செய்யவேண்டும்.

விலைவாசி உயர்வுகளைப் பற்றிக் கூறும் சமயத்தில், சர்க்கரை விலை அவசியமின்றி மேலும் மேலும் உயர்ந்துகொண்டே போகிறது. அதுவும் மக்களுக்குக் கிடைப்பதில்லை. அதேமாதிரி, உரவினியோகத்திலும், கூட்டுறவு முறையில் பல இடங்களிலே காலாகாலத்தில் கிடைப்பதில்லை; அப்படி ஆங்காங்கு உரங்கள் வந்து சேர்ந்தாலும், நிறுவை சரியாக இல்லாமல் பல குறைகள் இருக்கின்றன. அவைகளையெல்லாம் சரி செய்யவேண்டும்.

கடைசியாக, இன்று நமது மாவட்டங்களைப் பொறுத்த வரைக்கும், மழை நல்ல முறையிலே இல்லை என்று கவர்னர் உரையில் குறிப்பிடப்பட்டுள்ளது. எந்தெந்த மாவட்டங்களிலே மழை சரியாக இல்லையோ, எங்கெங்கு பயிர்த் தொழில் பாதிக்கப் பட்டிருக்கிறதோ, அங்கெல்லாம் விவசாயிகளைப் பாதுகாக்க, "க்ராப் இன்ஷூரன்ஸ் ஸ்கீம்" என் கொண்டு வரக்கூடாது என்று சர்க்கார் பரிசிலனை செய்யவேண்டும் என்பது மிக முக்கியமானது என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

மாகாண என்.ஜி.ஓ.-க்களைப் பொறுத்தவரை, "பே கமிஷன்" சிபாரிசுகள் வரவேற்கத்தக்கவை. ஆனலும், வேலைப் பளுவையும் கூடுதலாகச் செய்திருக்கிறோம். அதிக வேலையை அவர்கள் தலையில் சுமத்தியிருக்கிறோம். உண்மையாக இன்று இருக்கக்கூடிய

9th August 1960] [Sri K. Sattanatha Karayalar]

நிலையில், தினம் அரை மணிக்கூறு அவர்களிடம் அதிகமாக வேலை வாங்குகிறோம். ஒரு வருஷத்தில், 365 நாளில், சுமார் 52 நாட்கள் "ஸன்டேஸ்", 12 தினங்கள் "பெனல்டிமேட் சாடர்டேஸ்", ஓய்வு நாட்கள் இருந்தன. அது தவிர 24 தினங்கள் அவர்களுக்கு வருஷத்தில் "காஷுவல் லீவு" ஆகவும், "க்ளோஸ்ட் ஹாலிடே"-க்களும் இருந்தன அவைகளெல்லாம் இப்பொழுது குறைந்திருக்கிறது. சுமார் 275 நாட்கள் வேலைசெய்து வந்தவர்கள், இப்பொழுது 289 தினங்கள் வேலை செய்ய வேண்டியிருக்கிறது. அது தவிர, தினம் அரை மணிக் கூறு விதம் அதிகமாக வேலை செய்வதில் 144 மணிநேரம் அதிகமாக வேலை செய்யவேண்டியிருக்கிறது. மொத்தத்தில் ஒரு ஆண்டிலே 40-1/2 நாட்கள் அல்லது 1-3/4 மாதம் அவர்களிடம் நாம் அதிகமாக வேலை வாங்குகிறோம். ஆகவே சர்க்கார் பொதுவாக சுமத்தியிருக்கும் ஓர்க்லோடைப் பொறுத்த வரை லாபகரமாகவே செய்திருக்கிறார்கள் என்பது வரவேற்கத் தக்கதுதான். வேலை வாங்குவது பற்றிக் கவலையில்லை. ஆனால், ஊதியம் கொடுக்கும்போது, வயிறாரக் கொடுத்து, விலைவாசிகளைக் கட்டுப்படுத்தி, "க்ரெயின்ஸ்" முதலியவைகளை கட்டுப்பட்ட விலையில் கொடுத்து, சம்பளத்தையும் கூட்டிக் கொடுத்தால் போதும். அவர்களுக்கு சர்வீஸ் கண்டிஷன்களை இனியும் தளர்த்திக் கொடுக்கவேண்டும். கல்வித் துறையில் என்.ஜி.ஓ.-க்களின் குழந்தைகளுக்கு, பள்ளிக்கூடச் சம்பளச் சலுகை கொடுத்திருக்கிறார்கள். ஆனால், அவர்கள் முதலில் பணத்தைக் கட்டிவிட்டு, திருப்பி வாங்கும் நிலை மாறி, என்.ஜி.ஓ.-க்களின் குழந்தைகளுக்கு ஆண்டு முதலிலிருந்தே பணம் வாங்காமல் இருக்கும் நிலையை ஏற்படுத்த வேண்டும். அதற்கான உத்தரவு களைப் பிறப்பிக்க வேண்டும். அதேபோல், மருத்துவச் சலுகை களிலும், பல வசதிகள் செய்து கொடுக்கவேண்டும். முக்கியமாக, உணவுப் பொருள்களை, கட்டுப்படுத்திய விலைக்கு, நியாயமான விலைக்கு, ஜில்லாக் காரியாலயங்களிலாவது, கூட்டுறவு இயக்கம் மூலமாக விநியோகிக்க, ஏற்பாடுகளைச் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, என் உரையை முடிக்கிறேன்.

(Deputy Speaker in the Chair.)

* SRI G. GOMATHISANKARA DIKSHITAR : அன்பு மிக்க உதவி சபாநாயகர் அவர்களே, நமது கவர்னர் பெருமான் நிகழ்த்திய உரையை ஆதரித்து அந்த உரையில் கண்டுள்ள நமது ராஜ்ய அரசாங்கத்தின் நிர்வாகத்தில் ஏற்பட்டுள்ள அபிவிருத்தி களைக் கண்டு என்னுடைய மகிழ்ச்சியை இந்த சந்தர்ப்பத்தில் தெரிவித்துக்கொள்ளுகிறேன். நமது ராஜ்யம் இந்தியாவிலேயே எல்லா முறைகளிலும் அபிவிருத்தி அடைந்து வருகிறது என்பதற்கான அறிகுறிகள் இருப்பதால் இந்த ராஜ்யத்திலுள்ள ஒவ்வொருவரும் அரசாங்கத்துடன் அரசியல் அபிப்பிராய பேதம் இல்லாமல் இந்த ராஜ்யம் முன்னேற்றமடைவதற்கு ஒத்துழைக்க கடமைப்பட்டிருக்கிறார்கள் என்பதை இங்கே தெரிவித்துக் கொள்ள ஆசைப்படுகிறேன். இந்த ராஜ்யத்தின் முன்னேற்றம் நம்முடைய முன்னேற்றம் என்று கருதி அதற்கு எல்லோரும் ஒத்துழைக்கக் கடமைப்பட்டிருக்கிறார்கள். இந்த நிலைமையில் 11-30 a.m.

[Sri G. Gomathisankara Dikshitar] [9th August 1960

பொதுப் பாஷை விஷயத்தில் எந்த விதமான அபிப்பிராய பேதமும், தகராறும் இருக்கவேண்டிய அவசியம் இல்லை. அதற்கு அதிகப்படியாக கவனம் செலுத்தாமல் நாட்டின் முன்னேற்றத்திற்கு அதிகப்படியான கவனம் செலுத்த வேண்டும். அதற்கு அரசாங்கம் பாடுபட்டு வருகிறது; அதற்கு பல திட்டங்களைப் போட்டு அவற்றை நிறைவேற்றிக்கொண்டு வருகிறது. அதற்கு ஒத்துழைக்க வேண்டியது நம்முடைய கடமையாக இருக்கிறது. இந்நாட்டு மக்கள் பொருளாதாரத் துறையில் சுபிட்சமாக வாழ்வதற்கு அரசாங்கத்துடன் ஒத்துழைக்க எல்லோரும் கடமைப்பட்டிருக்கிறார்கள் என்பதை இந்தச் சந்தர்ப்பத்தில் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். அதற்கு எடுத்துக்காட்டாக நமது கவர்னர் பெருமானுடைய உரை இருக்கிறது.

தேசத்தின் முன்னேற்றத்திற்கு மிகவும் பாதகமாக, இந்நாட்டில் நெருக்கடி ஏற்பட்டிருக்கும் இந்தக் காலத்தில் மத்திய அரசாங்க ஊழியர்கள் வேலை நிறுத்தம் செய்ய ஆரம்பித்தார்கள். நெருக்கடியான சமயத்தில் அந்தச் செயல் ஒரு தேச விரோதமான செயல் என்பதைப் பொது மக்கள் நன்கு அறிந்து அந்த வேலை நிறுத்தம் வெற்றி ஆகாமல் இருக்க வேண்டும் என்று அரசாங்கத்துடன் ஒத்துழைத்தார்கள். அதைக் கண்டு அனைவரும் மகிழ்ச்சி அடைந்தார்கள். எந்த ஆட்சி நடைபெற்ற போதிலும் இப்படிப்பட்ட செயல் நல்லது அல்ல. அரசாங்கம் நல்ல முறையில் நடைபெறுவதற்கு இது மிகவும் பாதகமாக இருக்கும் என்பதை எடுத்துக்காட்டுகிறேன்.

நம்முடைய ராஜ்யத்திலுள்ள என்.ஜி.ஓ.-க்களுக்கு சம்பள உயர்வு "பே கமிஷன்" அறிக்கையின் அடிப்படையில் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதன் மூலமாக இலாகாக்கள் எல்லாம் நல்ல விதமான முறையில் நடைபெறும் என்று நம்புகிறேன். என்.ஜி.ஓ.-க்களும் தங்களுக்கு ஊதியம் அதிகப்படியாக கிடைத்திருப்பதால் நாட்டின் முன்னேற்றப் பாதையில் ஈடுபட்டு வருவார்கள். அரசாங்கம் கொண்டு வரக்கூடிய திட்டங்களையெல்லாம் நல்ல முறையில் நிறைவேற்றுவதற்கு வேண்டிய முறையில் வேலை செய்து வருவார்கள். அதற்கு இந்த "பே கமிஷன்" மூலமாகக் கொடுக்கப்பட்ட சம்பள உயர்வு சாதகமாக இருக்கிறது என்று நான் நம்புகிறேன். ஆனால் ஒரே ஒரு குறை மட்டும் இருக்கிறது. அதாவது கிராம உத்தியோகஸ்தர்களுடைய குறை. அது வெகு காலமாக இருந்து கொண்டு வருகிறது. அவர்கள் பரம்பரையினர்களா அல்லது சர்க்கார் உத்தியோகஸ்தர்களா என்ற பிரச்னை இருந்து கொண்டே இருக்கிறது. அது இன்னும் தீர்ந்தபாடில்லை. நாம் போடக்கூடிய திட்டங்கள் எல்லாம் நல்ல முறையில் நிறைவேற வேண்டுமானால் கிராம உத்தியோகஸ்தர்களுடைய ஒத்துழைப்பு வேண்டியதாக இருக்கிறது. அது நமக்கு மிகவும் தேவையாக இருக்கிறது. இப்பொழுது இருக்கிற நிலையைப் பார்த்தால் நாம் போடக்கூடிய திட்டங்கள் எல்லாம் நல்ல முறையில் செயல்படுவதற்கு இல்லாதபடி அவர்களுடைய நிலை இருக்கிறது.

9th August 1960] [Sri G. Gomathisankara Dikshitar]

அவர்களுடைய நிலை நமக்கு அனுகூலமாக இல்லாமல் இருக்கிறது. ஆகையினால் அவர்களுடைய நிலையை கவனித்து "பே கமிஷன்" நியமித்து எல்லோருக்கும் சம்பளத்தை உயர்த்தியது போன்று "காபினெட் சப் கமிட்டி" அவர்களுடைய நிலையை உயர்த்துவதற்கு வேண்டிய நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அவர்கள் முன்னேற்றமடையக் கூடிய வகையில் "காபினெட் சப் கமிட்டி" நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும் என்றும் அதற்கு ஆவன செய்யவேண்டும் என்றும் இந்தச் சந்தர்ப்பத்தில் தெரிவித்துக்கொள்ளுகிறேன். ஏனென்றால் கிராமங்களில் மக்கள் எல்லோரும் இந்த கிராம உத்தியோகஸ்தர்கள் மூலமும் மற்ற சிறிய சிறிய உத்தியோகஸ்தர்கள் மூலமும்தான் அவர்களுடைய கடமைகளை நிறைவேற்ற வேண்டியதாக இருக்கிறது. அவர்களுக்கு அதிகப்படியான சம்பளம் கொடுப்பதன் மூலமாகவும் அவர்களுடைய நிலையை உயர்த்துவதன் மூலமும் அவர்களை நல்ல முறைக்கு கொண்டு வருவதற்கு நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். இப்பொழுது இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் முடியும் தருவாயில் இருக்கிறது. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் ஆரம்பிக்கும் தருவாயில் இருக்கிறது. அந்த நிலையில் இந்த நாடு நல்ல முறையில் பொருளாதாரத்தில் சுபீட்ச வாழ்வு பெற வேண்டுமானால் இந்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் நல்ல முறையில் செயல் பட வேண்டும். அதற்கு எல்லா மக்களுடைய ஒத்துழைப்பும் வேண்டும். அப்பொழுது கட்சி பேதம் இல்லாமல் எல்லோரும் அரசாங்கத்துடன் ஒத்துழைக்க வேண்டும். அப்படி ஒத்துழைக்க எல்லோரும் கடமைப்பட்டிருக்கிறார்கள். நம்முடைய தமிழ் நாட்டில் அக்டோபர் மாதம் இரண்டாம் தேதி முதற்கொண்டு பஞ்சாயத்து கவுன்சில் வரப்போகிறது. கிராம ராஜ்யம் சட்ட பூர்வமாக கிராம மக்களுக்கு வரப்போகிறது. சட்ட பூர்வமாக கிராம மக்களுக்கு அதிகாரம் பங்கிட்டுக் கொடுக்கக்கூடிய நிலை வரப் போகிறது. ஆகவே பஞ்சாயத்து கவுன்சில் மூலமாகவும் சமுதாய நலத் திட்டங்கள் மூலமாகவும் கிராம மக்கள் சுபீட்சமாக வாழ்வதற்கு வழி ஏற்படப்போகிறது. அப்பொழுது எல்லோருடைய ஒத்துழைப்பும் வேண்டியது அவசியமாக இருக்கிறது. அப்படி சுபீட்சமாக வாழ்வதற்கு அவசியமாக உள்ளது குடிசைத் தொழில், கைத்தறி நெசவுத் தொழில்; இப்படிப்பட்ட பல தொழில்களை கிராமங்களில் ஆரம்பிப்பதன் மூலம் கிராம மக்கள் சுபீட்சமாக வாழ்வதற்கு வழி ஏற்படப்போகிறது. நம்முடைய அரசாங்கம் அதற்கு வேண்டிய வேலைகளைச் செய்து வருகிறது; முன்னேற்றப்பாதையில் பல காரியங்களைச் செய்துகொண்டு வருகிறது. அதைக் கண்டு நாம் மகிழ்ச்சி அடைய வேண்டியவர்களாக இருக்கிறோம். இப்படிப்பட்ட பல முன்னேற்றக் காரியங்களைச் செய்து வருவதால்தான் நம்முடைய ராஜ்யம் மற்ற ராஜ்யங்களுக்கு வழிகாட்டியாக இருக்கிறது. மத்திய அரசாங்கத்துடன் வாதாடி நமக்கு வேண்டியதைப் பெறுவதற்கு சக்தியுள்ள மந்திரிகள் நமது ராஜ்யத்தில் இருக்கிறார்கள். அப்படிப்பட்ட மந்திரிகளை நாம் பெற்றிருக்கிறோம். அது நமக்கு மிகவும் சந்தோ

[Sri G. Gomathisankara Dikshitar] [9th August 1960

ஷத்தைக் கொடுக்கிறது. அது மகிழ்ச்சி அளிக்கக்கூடிய விஷயமாகவும் இருக்கிறது. ஆகவே எல்லா வழிகளிலும் நாம் முன்னேற்றமடைவதற்கு நமக்குள் ஒற்றுமை இருக்கவேண்டும். அந்த சமயத்தில் பாஷை பிரச்னையைக் கிளப்புவதற்கில்லை. அப்படிக் கிளப்பினுல் நாட்டின் ஒற்றுமைக்கு அது பாதகமாக இருக்கும். ஆகவே பாஷைப் பிரச்னையைக் கிளப்பாமல் தேசத்துடன் ஒற்றுமையாக இருந்து எல்லாவற்றையும் அனுதாபத்துடன் கவனித்துவருவது அவர்களுடைய கடமையாக இருக்கிறது. பாஷைப் பிரச்னை அரசியல் காரியங்களுக்குக் குறுக்கிடாக இருக்கக்கூடாது என்பதை இந்த சந்தர்ப்பத்தில் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

கடைசியில் கவர்னர் பெருமானுடைய உரையை ஆதரித்து பாராட்டுதல் அளிக்கிறேன். எல்லாவிதமான சிறிய தொழில், பெரிய தொழில், கனரகத் தொழில், ரசாயனத் தொழில், உர உற்பத்தி, மின்சார உற்பத்தி முதலியவைகளைப் பற்றியெல்லாம் குறிப்பிட்டிருக்கிறார். அவைகள் எல்லாம் கிராம மக்களுக்கு நன்மை பயக்கக்கூடியதாக இருக்கிறது. அவைகளின் மூலம் நாட்டு மக்கள் முன்னேற்றமடைவதற்கு எல்லோரும் ஒத்துழைக்க வேண்டும், அதற்கு எல்லோரும் பாடுபடவேண்டும் என்று இந்த சந்தர்ப்பத்தில் கேட்டுக்கொண்டு எனக்குப் பேசுவதற்கு சந்தர்ப்பம் அளித்ததற்கு என் நன்றியைத் தெரிவித்துக்கொண்டு என்னுடைய உரையை இத்துடன் முடித்துக் கொள்கிறேன்.

* SRI R. SRINIVASA IYER : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, சபை முன் லால்குடி தொகுதி அங்கத்தினர் அவர்கள் வைத்துள்ள பிரேரபணையை ஆதரித்துச் சில வார்த்தைகளைச் சொல்ல விரும்புகிறேன். வழக்கம்போல் கவர்னர் உரையில் பருவ மழையைப்பற்றியும் அது இவ்வருஷம் தவறி விட்டதைப் பற்றியும் குறிப்பிட்டிருக்கிறார். அதைப்பற்றி அவருடைய உரையில் நாலாவது பாராவில் குறிப்பிட்டிருக்கிறார். கவலைக்கு இடம் அளிக்கிறது என்றும், நல்ல மழை பெய்ய கடவுளை பிரார்த்திக்க வேண்டும் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனுல் பெய்திருக்கக் கூடிய மழைத் தண்ணீரானது நமக்கு வரவேண்டியது வந்திருக்கிறதா என்பதைப் பார்க்கவேண்டும். சென்ற இருபத்தைந்து ஆண்டு காலமாக இந்த மேட்டூர் அணை சரித்திரத்திலேயே பார்த்திராத ஒரு விஷயத்தை நாம் இப்பொழுது பார்க்கிறோம். அந்தச் சரித்திரத்தை இப்பொழுது கொஞ்சம் ஆராய்வது அவசியமாக இருக்கிறது. சென்ற வருஷம் பெய்த மழைக்கு, இவ்வருஷம் ஜுன்–ஜுலை மாதத்தில் மழை 12 அங்குலம்தான் குறைவு. ஆகஸ்ட் 1-ம் தேதி வரை நான்கு அங்குலம்தான் குறைவு. இன்றைய வரையில் சென்ற வருஷ அளவுக்கு மழை பெய்திருக்கிறது. ஆனுல் இப்பொழுது மேட்டூர் தேக்கத்தில் 95 அடி தண்ணீர், அதாவது பாதி ஏரி அளவுதான் இருக்கிறது. இது திருப்திகரமாக இல்லை. மேட்டூர் அணையில் இப்பொழுது மூன்றில் இரண்டு பங்குக்குக் குறைவாகத்தான் தண்ணீர் இருக்கிறது. இதே சமயத்தில் சென்ற வருஷம் மேட்டூர் நீர்த்தேக்கம் நிரம்பி வழிந்து பிரவாகம் வருமோ என்ற பயம் இருந்தது. இப்பொழுது

9th August 1960] [Sri R. Srinivasa Iyer]

போதுமான தண்ணீர் இல்லாத நிலை ஏற்பட்டிருக்கிறது. இதற்குக் காரணம் என்ன என்பதைக் கொஞ்சம் ஆராய்ந்து பார்க்க வேண்டும். மழை இல்லாமல் இல்லை. போன வருஷம் இந்த சமயத்தில் "சர்ப்ளஸ்" இருந்தது. இந்த வருஷத்தில் நமக்குக் கிடைக்க வேண்டிய விகிதாச்சாரத் தண்ணீர் கிடைக்கவில்லை. அதற்கு வேண்டிய மழைக் கணக்கு மேட்டூர் அணையில் "இன்ஃப்ளோ" கணக்கு முதலிய புள்ளிவிவரத்தைக் கேட்டுத் தெரிந்து கொண்டால் விஷயம் நன்ருகத் தெரியும். ஆகவே புள்ளிவிவரங்களை கேட்டுத் தெரிந்து கொள்ளவேண்டும் என்று மராமத்து இலாகா அமைச்சரையும் இந்த இலாகா இஞ்சினியரையும் கேட்டுக்கொள்ளுகிறேன். அதைப்பற்றிய சந்தேகம் எனக்கு இருக்கிறது. சென்ற மே மாதம் நான் மைசூருக்குச் சென்றிருந்தேன். அங்கு மைசூர் சர்க்கார் எக்சிபிஷன் வைத்திருந்தார்கள்; அதைப் பார்வையிட்டேன். அங்கு சில பகுதிகளைப் பார்த்தபோது எனக்குக் கவலை ஏற்பட்டது. அங்கு காவேரியிலும் அதன் உபநதிகளிலும் அணைகள் கட்டியிருப்பதையும் இனியும் கட்டப்போவதற்கு திட்டமிட்டிருப்பதையும் காட்டியிருந்தார்கள். அதன் பிறகு 1924-ம் வருஷ ஒப்பந்தப்படி அவர்கள் நமக்கு உரிமையான தண்ணீரை விடுகிருர்களா என்பதை ஆராய்ந்து பார்க்க வேண்டும். சென்ற வருடம் நமக்குப் போதுமான தண்ணீரும், சர்ப்ளசும் இருந்ததே, இந்த வருஷம் போதுமான தண்ணீர்கூட இல்லையே அதற்குக் காரணம் என்ன என்பதை ஆராயவேண்டும். சர்ப்ளஸ் இருக்கவேண்டிய காலத்தில் குறைவாக இருக்க வேண்டிய காரணம் என்ன?

தினசரி "இன்ஃப்ளோ" (in-flow)-வை கவனிக்கவேண்டும். ஒவ்வொரு தினமும் எவ்வளவு அங்குலம் மழை பெய்தது, அதன் காரணமாக மேட்டூருக்கு எவ்வளவு க்யூசெக்ஸ் (cusecs) தண்ணீர் விடப்பட்டது என்கிற கணக்கை கவனிக்கவேண்டும். இதை நிர்ணயிப்பதற்கு "கேஜ் டிவிஷன்" என்று மைசூரில் நமது சர்க்கார் பி.டபிள்யூ.டி. வைத்திருக்கிருர்கள். ஆனால் அவர்கள் சரியான கணக்கை எடுக்கவில்லை என்றும், எடுக்க முடியவில்லை என்றும் மைசூர் சர்க்கார் அதிகாரிகள் தடை செய்கிருர்கள் என்றும் சொன்னுர்கள். இதை ஏற்கெனவே சர்க்காருக்குத் தெரிவித்திருக்கிறேன். வேறு யாராவது அங்கு போய்ப் பார்க்கப் போனாலும் அனுமதிப்பதில்லை. இந்த உண்மையை விசாரிக்க வேண்டும். ஆனால் இந்த மேட்டூர் சரித்திரத்தை எடுத்துப் பார்த்தால் இந்த வருஷத்தையும், சென்ற வருஷத்தையும் ஒப்பிட்டுப் பார்த்தால்—நமக்கு வரவேண்டிய தண்ணீர் வரவில்லை என்பது தெரியும். இதன் காரணமாக நன்ருக ஆராயவேண்டும். நம்மிடத்தில் சிறந்த நிபுணர்கள் இருக்கிருர்கள். ஏற்கெனவே நமது மாநிலத்தில் பணியாற்றிய நிபுணர்கள் திரு. திருமலை ஐயங்கார், திரு. வெங்கிடகிருஷ்ண ஐயர் போன்றவர்கள் இப்போது நம்மிடம் இல்லாவிட்டாலும் கூட, அவர்கள் இதர ராஜ்யங்களில் இருந்தாலும் கூட, இங்கே இருக்கக் கூடியவர்கள் சிறந்த நிபுணர்கள். இவர்களே நேரே சென்று காவேரி நதியையும்

[Sri R. Srinivasa Iyer] [9th August 1960

காவேரியின் ஒவ்வொரு உபநதியையும், மெர்க்காரா முதல் மேட்டூர் வரையில் பார்வையிட்டு, 1924-ம் வருஷத்துக்குப் பிறகு எவ்வளவு அணைகள் புதிதாகக் கட்டியிருக்கிறார்கள், கணக்குப் படியாக ஜலம் வருகிறதா, சென்ற வருஷம் எப்படி வந்தது, இப்போதும் அப்படி விட்டிருக்கிறார்களா என்பதை எல்லாம் பரிசீலனை செய்ய வேண்டும். ஏதோ வரக்கூடிய தண்ணீரைப் பகிர்ந்துவிடுகிறோம் என்று சொல்வதிலும், திருப்திபடுவதிலும், பிரயோஜனம் இல்லை. நமக்குள்ள உரிமைகளைக் காபந்து செய்யவேண்டியது சர்க்காரின் கடமை என்பதை வற்புறுத்திக் கேட்டுக்கொள்ளுகிறேன். அதோடு 4—8—1960-ந் தேதி இந்து பத்திரிகையில் மைசூர் நியூஸ் லெட்டரைப் பார்த்தால் தெரியும். மைசூர் கவர்ன்மென்டார் இன்னும் ஜாஸ்தி விஸ்தீரணம் சாகுபடிக்குக் கொண்டு வருவது பற்றி யோசித்து, 1924-ம் வருஷ ஒப்பந்தத்தையே கூட மாற்றி அமைக்கவேண்டுமென்று பிரயாசைப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். இதற்கு மாற்றாக நமது சர்க்கார் நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று போன வருஷம் நான் எழுதியதற்கு அதற்கு நடவடிக்கை தேவை இல்லை என்று சர்க்கார் கருதியதாக நேற்று மராமத்து இலாகா அமைச்சர் அவர்கள் கூறினார்கள். இனிமேலாவது இதைப்பற்றி நன்றாக ஆராய்ந்து பார்த்து நமக்கு வரவேண்டிய தண்ணீர் குறை இல்லாமல் இருப்பதற்கு தக்க நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

மேட்டூர் ஒரு "மல்டிபர்பஸ்" **(multi-purpose)** பிராஜெக்ட். அதாவது நீர்ப்பாசனத்திற்கும், மின்சாரத்திற்குமாகச் சேர்ந்து அமைக்கப்பட்டது. அதில் இரண்டாயிரம் க்யூசெக்ஸ் மின்சாரத்திற்காகவிட வேண்டுமென்றதில், நாலாயிரம் க்யூசெக்ஸ்க்கு மேல் காலவரையறைக்குப் பிந்தியும்கூட விடப்பட்டிருக்கிறது. இதனால் பெரும் அளவு பாதிக்கப்படாது என்றாலும், நாம் கவனிக்க வேண்டும். இந்த ஜலம் வீணாகப்போவதில்லை, எங்கோ விவசாயத்திற்கு விடப்படுகிறது என்று சொன்னாலும் நிரந்தரமான சாகுபடி இதனால் பாதிக்கப்படுவதைப் பார்க்க வேண்டும். இருக்கும் தண்ணீரை பி.டபிள்யூ.டி. அதிகாரிகள் சரியான முறையில் பகிர்ந்து அளிக்கிறார்கள் என்றாலும், கிராண்டு அணைக் கட்டுக் கால்வாயினால் சாகுபடி செய்யப்படுகிற எங்கள் பகுதியில் இன்னமும் பெரும்பாகம் நாற்று விடப்படவில்லை. நான் அதிகாரிகளை குறை கூறவில்லை. பூராத் தண்ணீர் வந்தால்தான் பகிர்ந்து கொடுக்க முடியும். கிட்டத்தட்ட இவ்வாண்டு ஒரு லட்சத்து ஐம்பதாயிரம் ஏக்கரா என் பகுதியில் இதுவரையில் போதுமான தண்ணீர் விடப்படாத காரணத்தினால் பாதிக்கப் பட்டிருக்கிறது. இன்னும் உணவு உற்பத்திப் பெருக்குத் திட்டத்தின் கீழ் **(Grow More Food Campaign** காலத்தில் நீர்ப் பாசனத்திற்காக போடப்பட்ட டெம்பரரி பைப்புகளையெல்லாம் யாதொரு முன் எச்சரிக்கையும் இல்லாமல் எடுத்துவிட்டார்கள். முன் திட்டமிட்டபடி 73 ட்யூடி கணக்கை அனுசரித்து அந்தப்படி எடுக்கப்பட்டு வருகிறது. என்னுடையதை எடுத்துவிட்டார்கள், அவனுடையதை எடுத்துவிட்டார்கள் என்று ஒவ்வொரு நாளும்

9th August 1960] [Sri R. Srinivasa Iyer]

என் தொகுதியில் பலர் குறைப்பட்டுக்கொண்டு வருகிறார்கள். 73 ட்யூடியில் என் பகுதி சி.எம்.பி. பாசன இடங்களில் சாகுபடி செய்ய முடியாது. இதை பி.டபிள்யூ.டி. அதிகாரிகளே ஒப்புக் கொள்ளுகிறார்கள். ஆகவே மேலும் நல்ல முறையில் நீர்ப்பாசன வசதி செய்து கொடுப்பதற்கு இதுபற்றி முழுவதுமே ஆராய வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

இன்னும் மைனர் இர்ரிகேஷன் திட்டத்திற்கு ஸ்டாஃப்புகள் (staff) வேண்டுமென்று கேட்டால் அதை சாங்ஷன் செய்ய ரொம்பக் காலதாமதமாகிறது. 25—11—1959-ல் கேட்கப்பட்ட ஸ்டாஃப் இன்னமும் அனுமதிக்கப்படவில்லை. கிட்டத்தட்ட ஓராண்டுகாலமாகியும்கூட உத்தரவு செய்யப்படவில்லை. இதற்கு சீக்கிரமாக சாங்ஷன் செய்து இந்தப் பிராந்தியங்களில் உள்ள சிறிய அணைக்கட்டுகளைக் கட்டினால்தான் பெய்கின்ற மழைத் தண்ணீரையாவது தேக்கி வைத்துக்கொண்டு இங்கே பாசனம் செய்வதற்கு வசதி ஏற்படும் என்று தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

இதே நேரத்தில் இவ்வருஷம் எஸ்டிமேட்ஸ் கமிட்டி சமர்ப்பித்திருக்கும் ரிப்போர்ட்டில் நீர்ப்பாசனத் திட்டங்களைப் பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது. வழக்கம்போல இதைப் பரிசீலனை செய்வதற்குக் காலதாமதம் செய்யாமல், சீக்கிரமாக அவற்றைப் பரிசீலனை செய்து உணவு உற்பத்தியை அதிகப்படுத்தவேண்டியது அவசியமாக இருப்பதினால் தக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். எவ்வளவு சீக்கிரம் செயல்படுத்த முடியுமோ அவ்வளவு சீக்கிரம் செயல்படுத்த வேண்டும்.

அடுத்தது, உணவு தானியங்களின் விலைவாசி. அதைக் குறைக்க வேண்டுமென்று ஒரே கூச்சல். உணவு உற்பத்தி செய்கின்றவர்களுடைய நிலைமை எப்படி இருக்கிறது என்பதைப் பற்றி எடுத்துச் சொல்வதற்குக் கட்சி கிடையாது. அவர்களுள் யூனியன் கிடையாது. யாரும் அதைப்பற்றிச் சொல்வதில்லை. ஆனால் உணவு தானியங்களின் விலையைக் குறைக்க வேண்டுமென்று சொல்கிறவர்கள் இங்கே மின் விசிறிக்கு (electric fan) அடியில் உட்கார்ந்து கொண்டு வேலை செய்கிறவர்கள்தான். விவசாயிகள் படும்பாடு இவர்களுக்குத் தெரியாது. உரம், கடலைப் பிண்ணாக்கு, பருத்திக்கொட்டை, துணி முதலியவற்றின் விலைகள் எல்லாம் ரொம்ப ஜாஸ்தியாக ஏறி இருக்கின்றன. விவசாயத் தொழிலாளர்கள் ஒரு கஜம் 4 அணாவுக்கு வாங்கிய துணி ஒரு ரூபாய், ஒன்றரை ரூபாய் என்று கொடுத்து வாங்க வேண்டியிருக்கிறது. ஆனால் அவர்கள் உற்பத்தி செய்கின்ற உணவு தானியங்களின் விலையைமட்டும் குறைக்க வேண்டும் என்று போடப்படுகிற கூச்சல் தாங்க முடியாததாக இருக்கிறது. இன்றைய தினம் விவசாயக் கூலிகளுக்கும் நியாயமான குறைந்தபட்ச கூலி நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. இதனால் எல்லாம் சாகுபடிச் செலவு எவ்வளவு அதிகமாகிறது? ஆகவே இந்தப் பிரச்னைக்கு என்னைக் கேட்டால் சர்க்கார்தான்

[Sri R. Srinivasa Iyer] [9th August 1960

சப்ஸிடி (subsidy) கொடுத்து இந்த தானியங்களை சாகுபடியாளர்களுக்கு எவ்விதமான பாதகமும் ஏற்படாதவகையில் வாங்கி, சென்னை, கோயம்புத்தூர் போன்ற தொழிலாளர்கள் இருக்கும் இடங்களில் குறைந்த விலைக்கு விற்கவேண்டும். அப்படிச் செய்தால்தான் இந்தப் பிரச்னையை தீர்க்க முடியும். அப்போது தொழிற்சாலைகளில் அரசியல் கட்சிகளுக்கு தொழிலாளர்களிடம் வேலையிராது.

இரண்டாவதாக விவசாய ப்ரொடக்ஷன். அநேகமாக இதர ராஜ்யங்களையெல்லாம்விட நாம்தான் உற்பத்தி லிமிட்டை எட்டிவிட்டோம். சராசரி ஒரு ஏக்கருக்கு 1968 பவுண்டுக்குமேல் நெல் உற்பத்தி செய்கிறோம். கோயம்புத்தூர் காலேஜில் இதற்குப் புள்ளிவிவரம் இருக்கிறது. இதர ராஜ்யங்களில் 828 பவுண்டுக்குத்தான் உற்பத்தி இருக்கிறது. அந்தப் பகுதியில் கங்கையிலும், இதர நதிகளிலும் தண்ணீர் போய்க்கொண்டே இருந்தாலும் அணைக்கட்டி தண்ணீர் சப்ளை செய்தாலும் அம்மாநில விவசாயிகள் அதை உபயோகப்படுத்துவதில்லை. மழையைப் பார்த்துச் சாகுபடி செய்யவேண்டிய நிலைமை இருக்கிறது. இங்கே அப்படி இல்லை எல்லா நீர்ப்பாசனத் திட்டங்களையும் நன்கு பயன்படுத்துகிறோம். இங்கே போடவேண்டிய எல்லாத் திட்டங்களும்—இரண்டொன்றைத் தவிர—பூர்த்தியாகிவிட்டன. உணவு உற்பத்தி லிமிட்டையும் தாண்டிவிட்டோம். ஆகவே ஸ்ரீ சின்னதுரை சொன்னதுபோல நாம் மிகவும் பிற்போக்காக இருக்கிறோம் என்று ஒன்றும் வருந்த வேண்டியதில்லை.

இன்னொன்று. உர விநியோகம்பற்றி அநாவசியமாக ஏற்பட்ட குழப்பத்திற்கு இடமே இல்லை. கூட்டுறவு சொஸைடி மூலமாக உர விநியோகம் செய்யவேண்டுமென்ற ஏற்பாடு மிகமிகச் சிறந்த ஏற்பாடு. நியாயமான உத்தரவு. தனிப்பட்ட வியாபாரிகள் முன்பு மூட்டை முப்பத்தி எழு ரூபாய்க்கு வாங்கி, எழுபத்தைந்து, எண்பது ரூபாய்க்கு விற்றார்கள். அதைப் போக்க இந்த முறை சிறந்தது. ஆனால் கூட்டுறவு சொஸைடிகள் போதுமான பணத்தை வைத்துக்கொள்ளாததனால் சிரமம் ஏற்பட்டது. அதிகாரிகளைக் குறைகூறிப் பயனில்லை. எவ்வளவுதூரம் தேவையோ அது கொடுக்கப்பட்டது. இன்னமும் கொடுக்கப்படும். மத்திய பாங்கு கடன் உதவி அளிக்கிறார்கள். ஆகவே போதுமான அளவுக்கு கூட்டுறவு சொஸைடிகள் முன்கூட்டியே கடன்உதவி பெற்று உரம் வாங்கி வைத்துக்கொண்டால் சாகுபடி காலத்தில் தட்டு இல்லாமல் விநியோகிக்க முடியும். அப்படிச் செய்யவேண்டுமே தவிர சர்க்காரைக் குறைகூறுவது சரியல்ல.

முக்கியமாக ஒரு விஷயத்தை சொல்லிவிட்டு முடித்துக்கொள்கிறேன். அது மேஜர் அண்ட் மைனர் போர்ட்ஸ், (major and minor ports) தூத்துக்குடி, மங்களூர் துறைமுகங்கள் இவைகள் எல்லாம் பெரிய சமாசாரம். தஞ்சாவூரில் 540 மைல் நீளம் சமுத்திரக்கரையிருக்கிறது. நாகபட்டினம், ஒரு பெரிய துறைமுகம். சிறிய துறைமுகங்களான அதிராம

பட்டினம், கோடிக்கரை, காவிரிப்பூம்பட்டினம் அல்லது தரங்கம் பாடி இவைகளில் பாய்கள் கட்டிய கப்பல்களில் பிரபலமான வியாபாரம் நடந்தது எனக்குத் தெரியும். அவைகள் இப்பொழுது அடைபட்டுக் கிடக்கின்றன ஆக, மைனர் துறைமுகங்களை விருத்தி செய்தால், அதற்காக மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஒரு திட்டம் வகுத்தால், ரெயில் மூலம் எற்றுமதி யாகக்கூடிய சரக்குகள் சம்பந்தமான பிரச்னை மிகக் குறையும். ஆகவே தூத்துக்குடி துறைமுகத்திற்கு முதலிடம் கொடுத்து அதற்கு வேண்டியது செய்து இதை விருத்தி செய்யவேண்டியது தவிர நான் சொன்ன இந்த மூன்று மைனர் போர்ட்டுகளை, தஞ்சாவூரில் நன்கு விளங்கி வந்தவைகளை, விருத்தி செய்வதற்கு ஆவன செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டு மற்ற விஷயங்களைப் பற்றிப்பேசுவதற்கு சாவகாசம் இல்லாததால் சாவகாசம் கிடைக்கும்போது பேசிக்கொள்கிறேன் என்று கூறிக்கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

* **Dr. Srimathi SATHIYAVANIMUTHU :** சட்டமன்ற துணைத் தலைவர் அவர்களே, கவர்னர் பெருமான் அவர்களது உரையின்மீது நான் என் கருத்துக்களைச் சொல்ல விரும்புகிறேன். கடந்த ஆண்டு 5-12-1959-ல் அவர்கள் தந்த பேருரைக்கும், எட்டு மாதங்கள் கழிந்த பிறகு இப்பொழுது அவர்கள் தந்துள்ள இந்தப் பேருரைக்கும் நான் அதிக வித்தியாசம் காணமுடியவில்லை. இன்ன திட்டங்கள் செய்ய இருக்கிறோம் என்பதில் வேண்டுமானால் மாறுதல்கள் பல இருக்கின்றனவே தவிர இன்னின்ன திட்டங்களை முடித்து விட்டோம், அதனால் இன்னின்ன பலன் இப்பொழுது அடைந்திருக்கிறோம் என்ற புள்ளிவிவரங்களோ அல்லது அதற்குரிய விளக்கங்களோ இந்தப் பேருரையில் இல்லாததைக் கண்டு நான் பெரிதும் வருந்துகிறேன். பிற மாநிலங்களின் ஆற்று நீரை சென்னைக்குக் கொண்டுவர பல திட்டங்கள் இருக்கின்றன என்று அவர் மகிழ்ச்சியோடு தெரிவித்துள்ளார். ஆனால் கோதாவரி, கிருஷ்ணா ஆற்று நீரை எப்பொழுது கொணர இருக்கிறார்கள் என்று சுட்டிக் காட்டாமல் இருப்பது உண்மையிலேயே நமக்கு எமாற்றத்தைத்தான் அளிக்கிறது. குறிப்பாக, சென்னை மாநிலத்திற்கு குடிதண்ணீரும், நீர்ப்பாசன வசதிக்கும் மிக மிக நல்ல முறையில் ஒத்துழைப்பு தந்து இந்த மாநிலம் செழிக்கச் செய்ய இந்த இரு ஆறுகளின் தண்ணீரையும் எப்பொழுது கொணர இருக்கிறார்கள் என்பதுபற்றி ஒரு வாசகம்கூட இல்லாதிருப்பது சென்னை வாசியான என்னைப் போன்றோருக்கு பெரிதும் ஏமாற்றத்தை அளிக்கிறது. அதேபோன்று, "1959-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 4-ம் தேதி நமது பிரதம மந்திரி இந்திய மொழிக்கொள்கை பற்றிப் பேசிய பேச்சும், அரசியலமைப்பின் 344-வது பிரிவின்படி ஜனாதிபதி மேற்படி கொள்கை அடிப்படையில் வெளியிட்ட உத்தரவும், மொழி பற்றிய தொல்லை தரும் பிரச்னைக்கு முடிவு கண்டுள்ளன" என்று திட்டவட்டமாக இதில் குறிப்பிடப் பட்டிருக்கிறது. நேருபிரானின் கொள்கை அடிப்படையில்தான் ஜனாதிபதி அவர்கள் கொள்கையிருக்கிறது என்பதை இங்கு அழுத்தந்திருத்தமாக கூறியிருப்பதை நான் உண்மையிலேயே கண்டிக்க விரும்புகிறேன். நான் மாத்திரமல்ல. நேருபிரான்

[Dr. Srimathi Sathiyavanimuthu] [9th August 1960

தந்த இந்த உறுதிமொழி அளவிற்கு ஜனதிபதி ராஜேந்திர பிரசாத் அவர்கள் தந்த உறுதிமொழி தொனிக்கவில்லை என்பதை இந்த நாட்டிலுள்ள பல பத்திரிகைகள் எழுதியிருக்கின்றன, வற்புறுத்தியிருக்கின்றன. நான் ஆதாரபூர்வமாகச் சொல்லவேண்டுமானல், இது குறித்து நாங்கள் நடத்திய போராட்டத்திற்கும், அந்தப் போராட்டத்தை திருப்பிப் பெற வேண்டுமென்று மதிப்பிற்குரிய நேரு பிரான் அவர்கள் எங்கள் போராட்டக் குழுவின் தலைவராகிய பாராளுமன்ற உறுப்பினர் தோழர் ஈ. வி. கே. சம்பத் அவர்களுக்கு எழுதிய பதிலில்கூட அவர் நேரடியாக வருத்தத்தை தெரிவித்துக் கொள்ளாவிடினும், நாங்கள் எந்தக் குற்றச்சாட்டைச் சொல்லி ராஜேந்திர பிரசாத் அவர்கள் சொல்லியதை திருப்பிப் பெற வேண்டுமென்று கேட்டோமோ அந்தக் குற்றச்சாட்டை ஒத்துக் கொள்ளும் முறையில் நேருபிரான் வாசகம் இருக்கிறது. "நான் கூறிய உறுதிப்பாடு மேலெழுந்தவாரியாக பிரசாத் அவர்களின் உரையில் குறிப்பிடப்பட்டிருக்கிறதே தவிர நான் கூறிய உறுதிமொழியின் அடிப்படையில் அதை ஆதாரமாக வைத்துக்கொண்டு அவர்கள் "டைரக்டிவ்"—உத்தரவு—கொடுக்கவில்லை" என்பதைத் தான் அந்தப் பதிலில்கூட எழுதியிருக்கிறர்கள். நேரு அவர்களே, மேலெழுந்தவாரியாகத்தான் என் கருத்து பிரதிபலிக்கிறதே தவிர எனது உறுதிமொழி அடிப்படையில் பிரசாத் அவர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை என்று ஒரு பெரிய போராட்டத்தில் ஈடுபட்டிருக்கிற எங்களுக்குப் பதில் தந்திருக்கிறர்கள் என்றல், கவர்னர் அவர்கள் "மேற்படி கொள்கை அடிப்படையில் வெளியிட்ட உத்தரவும்" என்று கூறியிருப்பது உண்மையில் வருந்தத் தக்க தாகும். யாரிடத்திலிருந்து இந்த உறுதிமொழி வரவேண்டுமென்று எதிர்பார்த்தோமோ அது வந்துவிட்டதால் நாங்கள் மகிழ்ச்சியடைகிறேம். தவிர கவர்னர் அவர்கள் உரையில் இந்த ஐயப்பாடு இருப்பது வருந்தத்தக்கது. அதேபோன்று இம்மாநில ஆட்சி மொழி தமிழ் என்று நாம் ஏற்கனவே தெரிவித்திருக்கிறேம். அந்த முடிவை படிப்படியாக அமுலுக்குக் கொண்டு வருவதற்கு நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன என்று கூறப்பட்டிருக்கின்றன. அது சரியல்ல என்று ஆதார பூர்வமாக காட்டமுடியும். எங்கள் கட்சியைச் சார்ந்த இருவர் பேசியதில், போலீஸ் இலாகாவிலும், ஆலயங்களிலும், தமிழ் இருக்கவேண்டிய இடத்தில் இந்தி திணிக்கப்படும் முறையில் பல உத்தரவுகள் போடப்படுகின்றன என்றர்கள். ஆக, படிப்படியாக தமிழைக் கொண்டுவருவதற்கு மாறுக, படிப்படியாக இந்தியை புகுத்துவதைத்தான் நாம் நேரில் காண்கிறேம். ஆக, சொல் ஒன்று செயல் வேருக இருப்பதைப் பார்த்து நாங்கள் வருந்து கிறேம். அதேபோன்று, "எந்த மொழியையும் அவர்கள் விருப்பப் பட்டால்தான் படித்துக் கொள்ளவேண்டுமே தவிர நாமாக அவர்கள்மீது பலாத்காரமாக திணிக்கக்கூடாது" என்ற நல்லதொரு வாசகத்தை நேரு பிரான் அவர்கள் "ஆட்சி மொழி பற்றி பிரதம மந்திரி நேரு அவர்கள்" என்பதில் விளக்கிக் கூறியிருக்கிறர்கள். ஒரு மொழியைத் திணிப்பதில் எந்தளவு திணிக்கப்படுகிற மாகாணங்களில் உள்ள மக்கள் அந்த மொழியை வெறுப்பார்கள், அது எந்தவிதமான எதிர்ப்பில் கொண்டு செல்லும் என்பதை ஆருடம்

9th August 1960] [Dr. Srimathi Sathiyavanimuthu]

கூறுவதுபோல் நேரு அவர்கள் சொல்லியிருப்பதை, இன்றைய தினம் நாங்கள் திராவிட நாடு பிரிய வேண்டுமென்று லட்சியம் வைத்துக் கொண்டிருப்போர் அழுத்தந்திருத்தமாக நாங்கள் அதை வரவேற்கிறோம் என்பதை நான் இந்த நேரத்தில் உங்களுக்குச் சுட்டிக் காட்ட விரும்புகிறேன். அவர்கள் கூறியிருப்பது, "இந்தியாவின் வட்டார மொழிகள் நாளடைவில் போதனை மொழிகளாக வரப்போகின்றன என்கின்ற இந்த அடிப்படை உண்மையை நீங்கள் கிரகித்துக் கொண்டால் இந்தியாவில் வரப் போகிற புரட்சிகரமான மாறுதலை பற்றி நீங்கள் பாராட்டுவீர்கள், இந்த மாறுதல் நல்லதோ கெட்டதோ அது ஒரு புறமிருக்கட்டும். இது ஏற்பட்டுத் தீரவேண்டிய ஓர் இன்றியமையாத மாறுதல். இதனால் சில அபாயங்கள் ஏற்படும் என்பதை நான் உணர்ந்தாலும், இது விரும்பத்தக்க மாறுதல் என்றுதான் கருதுகிறேன்" என்று கூறியிருக்கிறார்கள். விரும்பத் தக்க மாறுதல் என்று நேரு அவர்கள் சொல்லியிருப்பது எதைச் சுட்டிக் காட்டுகிறது என்றால், அது பற்றி சொல்கிறார், "பிரிவினை உணர்ச்சியினால் ஓரளவுக்கு ஏற்படுகின்ற அபாயங்களைப் பற்றி நான் சொல்கிறேன், அவற்றை நான் உணர்ந்தாலும் இந்தப் பிரச்னையை அலட்சியம் செய்வதால் மட்டும் நீங்கள் அந்த அபாயங்களை ஒழித்து விட முடியாது. என்றைக்காவது ஒரு நாள் அவற்றை எதிர்நோக்கியே ஆகவேண்டும்" என்று கூறியிருக்கிறார்கள். "விரும்பத்தகாத மொழித் திணிப்பு பிரிவினை உணர்ச்சிக்கு ஏதுவாகி கட்டாயம் ஏக இந்தியா என்ற அடிப்படை மாறி மாநிலக் கோரிக்கைகள், பிரிவினை உணர்ச்சிகள் தலையெடுத்து விடும்" என்று நேருபிரான் அவர்கள் ஆரூடம் கூறியிருப்பது, நாங்கள் கோருவது திராவிட நாடு பிரியத்தான் வேண்டுமென்று, அதற்கு இந்தித் திணிப்பு எங்கள் கோரிக்கையை வலுப்படுத்துகிறது என்று சுட்டிக் காட்ட விரும்புகிறேன். பிற மொழி எங்களுக்கு வேண்டாமென்று சொல்லும்போது அதைத் திணிக்கிறீர்கள். ஏன் திணிக்கிறீர்கள் என்று கேட்கும் போது இந்த மன்றத்திலும், வெளியிலும் பொறுப்பு வாய்ந்த அமைச்சர்களும், ஏனையோரும், அகில இந்திய அரசியல் சட்ட அமைப்புப்படி இந்தியை கட்டாயமாக ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று சொல்கிறார்கள். அகில இந்தியா என்று ஒத்துக் கொண்டால் அவர்கள் சொல்கிற கொள்கையை ஏற்றுக் கொள்ளலாம். குறிப்பாக ஆண்டவனிடத்தில்கூட, நாம் ஆண்டவனிடம் சென்று நம் குறைகளை நாம் தமிழிலேயே எடுத்துச் சொல்லி "பகவானே என் குறைகளை நீக்க மாட்டாயா" என்று ஆண்டவனோடு மனம் விட்டுப் பேசக் கூடிய இடத்தில்கூட இவ்வளவு காலமாக வடமொழியில் சொல்லவேண்டுமென்று இருந்தது. இப்பொழுது இந்தியில் இருக்கவேண்டுமா? அகில இந்தியா அரசியல் சட்டத்தை ஒத்துக்கொண்டால் தமிழ் இருக்க வேண்டிய இடத்தில் இந்தி வருவது, நம்மை அறியாமலேயே இந்தி வருவதை நாம் ஒத்துக்கொள்கிறோம். எனவே, இதைக் கைவிட வேண்டுமென்றும், இந்திய அரசியல் சட்டத்தை நாம் மாற்றியமைக்க வேண்டுமென்ற முறையில் எங்கள் கட்சியைச் சார்ந்தவர்கள் இங்கு பேசியிருக்கிறார்கள். எனவே இந்திய

[Dr. Srimathi Sathiyavanimuthu] [9th August 1960

அரசியல் சட்டத்தில் இந்தத் திருமணத்தைக் கொண்டுவர சிபாரிசு செய்யுங்கள்.

12 noon. ஆகவே, நேரு பெருமான் அவர்களே இந்தப் பிரிவினையை ஆதரிக்கின்ற முறையில் இருக்கும்போது, இந்த மாநில அமைச்சர்களைக் கேட்டுக்கொள்கிறேன், நேரு பெருமான் அவர்கள் வழியில் செல்லுங்கள், அவரது வழிப்படி அவர்கள் சொல்லுவதை ஒத்துக்கொள்ளுங்கள் என்று.

அதே போன்று, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் பல திட்டங்களை நிறைவேற்றி விட்டோம் என்று கவர்னர் பெருமான் அவர்கள் கூறியிருக்கிறார்கள். என் தொகுதியை பொறுத்த அளவில், இரண்டு சேரிகளை இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் எடுத்துக்கொண்டார்கள். ஒன்று கிரேநகர், இன்னொன்று வாழைமாநகர். இதுவரை ஒதுக்கப்பட்ட தொகையைவிட அதிகப்படியான தொகையை செலவழித்து விட்டோம் என்று பெருமையோடு சொல்லப்பட்டிருந்தும், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் எடுத்துக்கொண்ட இந்த இரண்டு சேரிகளையும் சீர்படுத்தவில்லை. அது மட்டுமல்ல, சேரிகளை அபிவிருத்தி செய்யவும், இன்னும் பல மசோதாக்களை கொண்டு வரப் போகிறோம் என்று சர்க்கார் தரப்பில் கூறப்பட்டது. அதே சமயத்தில் இந்த மாநகராட்சி சேரிகளை ஒழுங்காக வைத்திருக்கவில்லை என்று ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்கள் கண்ணீருக்குப் பதிலாக செந்நீர் வடித்தார்கள். அது நிஜக் கண்ணீரா வெறும் நீலிக் கண்ணீரா என்பதை 'சாகவில்லை இருக்கிறோம் சாக்கடையில் வாழ்கிறோம்' என்று தினம் சேரியில் உழன்று வேதனைக் கண்ணீர் வடிப்பவர்கள் அறிவார்கள். வெறும் வெத்துக் கண்ணீர் வடிக்கின்றவர்கள் சேரிவாழ் மக்களுக்காக ஒன்றும் செய்யவில்லை, வேண்டுமானால் அவர்களுடைய இந்த நீலிக் கண்ணீர் தேர்தல் காலத்துக்கு ஓட்டுப் பெற பயன்படும் என்று அவர்கள் நினைக்கலாம். இவ்விதம் ஒன்றும் செய்யாமல் இருந்து விட்டு இங்கு வந்து நீலிக்கண்ணீர் விடுவது பேதமையிலும் பேதமை என்று தான் சொல்ல வேண்டியிருக்கிறது. ஆட்சி பீடத்திற்கு வந்து 13 ஆண்டுகள் ஆகியும் இதுவரையிலும் சேரிகளுடைய நிலையைச் சீர்திருத்தவில்லை என்றால், அதற்கு என்ன காரணம்? 64 லட்சம் ரூபாய் ஒதுக்கி வைத்துவிட்டு, அதில் 34 லட்சம் ரூபாய் செலவிடப்படவில்லை என்று சொன்னால், சேரிவாழ் மக்களுடைய பணத்தை மிச்சம் பிடித்து வைத்துக் கொண்டு இருப்பார்களானால், இவர்கள் தங்கள் இருதயத்தை இரும்பாக மாற்றி வைத்துக்கொண்டு, அதனை எனி மேல் ஏறி பரண் மீது வைத்துவிட்டு இதயமில்லாதவர்களாக பேசுகிறார்களே தவிர, சேரிவாழ் மக்களின் நிலையை உணர்ந்து பேசுபவர்கள் அல்ல. இந்த நிலைமையை இன்னும் நீடித்துக்கொண்டிருக்கமுடியாது, இன்னும் அவர்களை ஏமாற்றிக்கொண்டிருக்க முடியாது. ஆகவே அவர்களுக்காக வேண்டிய திட்டங்களை உடனடியாக நிறைவேற்ற வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

9th August 1960] [Dr. Srimathi Sathiyavanimuthu]

அதோடு புதிய தொழிற்சாலைகளை ஆரம்பிக்கும் போது எல்லாப் பிராந்தியங்களிலும், பரவலாக அவற்றை பகிர்ந்தளிக்கும் அவசியத்தை மத்திய அரசாங்கத் திட்டக் குழுவின் கவனத்திற்குக் கொண்டு வந்ததே இந்த அரசாங்கம் செய்த மற்றொரு காரியம், என்று கவர்னர் பெருமான் கூறியிருக்கிறார். நாங்கள் நீண்ட காலமாக இம்மாதிரி தொழிற்சாலைகள் ஏற்படும் போது அவைகள் பரவலாக இருக்கவேண்டுமென்று பேசி வந்தோம். அப்போதெல்லாம் எங்களைப்பார்த்து கேலி செய்தார்கள். இன்று தெரிந்தோ தெரியாமலோ நாங்கள் சொன்னதை ஒப்புக்கொண்டிருக்கிறார்கள் வடநாட்டு அரசாங்கத்தின் தூதுவராக இருக்கிற கவர்னர் பெருமான் அவர்கள். இந்த மாநிலத்திலுள்ளவர்கள் எங்களைப்பற்றி எவ்வளவு தான் திரைபோட்டு மறைத்து வைத்திருந்தாலும் கூட டெல்லி தூதுவராய் இருக்கின்ற கவர்னர் பெருமான் அவர்கள் எங்கள் கோரிக்கையை நன்றாக உணர்ந்துதான், தொழிற்சாலைகளை பரவலாக ஏற்படுத்த வேண்டும் என்று கூறியிருக்கிறார்கள். அதோடு நம்மிடையே இருக்கின்ற வேற்றுமைகளை மறந்து செயல்பட்டால் நமது காரியங்கள் எல்லாம் நிறைவேற்றப்படும் என்று உறுதியுடன் நம்புவோமாக என்று குறிப்பிட்டிருப்பது, டெல்லி சர்க்கார் எங்கள் குறிக்கோளை உணர்ந்திருக்கிறது, அவர்களிடம் எங்கள் கருத்து வலுவு அடைந்திருக்கிறது என்று மீண்டும் மீண்டும் தெரிவித்துக் கொண்டு இந்த கருத்து தெரிவிக்க சந்தர்ப்பம் தந்தமைக்கு நன்றி தெரிவித்து முடித்துக்கொள்கிறேன்.

**SRI J. MATHA GOWDER** : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கவர்னர் அவர்களுடைய உரையை ஆதரிக்கும் முகத்தான் ஒரு சில கருத்துக்களை சொல்ல ஆசைப்படுகிறேன். கவர்னர் பெருமான் அவர்கள், சென்ற டிசம்பர் மாதத்தில் நிகழ்த்திய உரைக்குப் பின்னால் மறுமுறையாக இப்போது நம்மிடத்தில் உரை நிகழ்த்தியிருக்கிறார்கள். டிசம்பர் மாதத்திற்கும் இன்றைக்கும் இடையில் எட்டு மாதத்திற்குள் புரட்சிகரமான மாறுதல் ஒன்றும் அவர்களுடைய உரையில் காணப்படவில்லை என்று சொல்லுவதைப் பார்த்தால் சிரிப்புத்தான வருகிறது. சாதாரணமாக ஒரு குழந்தையைப் பெற்றெடுக்க வேண்டுமானாலும் கூட 10 மாதங்கள் வேண்டும். அதைக்கூட ஆலோசிக்காமல் எட்டு மாதத்திற்குள் எந்த விதமான மாறுதலும் இதில் இல்லை என்று சொல்லுவதைப் பார்த்து பரிதாபப்பட வேண்டியிருக்கிறது. (குறுக்கீடு) எட்டு மாதத்தில் பிறக்கக்கூடிய குழந்தை உதவாக்கரை குழந்தையாகத்தான் இருக்க முடியும். அப்பேர்ப்பட்ட உதவாக்கரைக் குழந்தை எங்களுக்குத் தேவையில்லை. மிகவும் நல்ல முறையில் உறுதிடன் இருக்கக்கூடிய குழந்தைகள் பிறக்க வேண்டும் என்று தான் நான் விரும்புகிறேன். உதவாக்கரைகள் வேண்டுமென்று நான் ஆசைப்படவில்லை. அவருடைய உரையில் பரம்பிக்குளத் திட்டம் நிறைவேறுவதற்கு வேண்டிய பேச்சு வார்த்தைகளை நடத்தி, கேரள சர்க்காரோடு சுமுகமாக முடிவு செய்திருக்கிறோம் என்று சுட்டிக் காண்பித்திருக்கிறார்கள். சென்ற முறை கவர்னர் அவர்கள் உரை நிகழ்த்திய பின்னால், இந்த நாட்டில் ஒரு சில கட்சிகள் வெளியில்

[Sri J. Matha Gowder] [9th August 1960

பல்வேறு விதமான பிரசாரங்களை செய்து கொண்டிருந்தார்கள். கேரள சர்க்கார் தண்ணீர் கொடுக்க மறுத்து விட்டார்கள் என்று சொல்லிக்கொண்டு வந்தார்கள். இந்த நிலைமையிலும் சென்னை அரசாங்கம் விவேகமான முறையில் பேச்சு வார்த்தைகளை நடத்தி, அவர்களிடம் நமது சகோதர பாசத்தை ஏற்படுத்திக் கொண்டு சுமுகமான முடிவை ஏற்படுத்தியிருக்கிறோம். ஆனால், ஒரு சில கட்சிக்காரர்கள், காங்கிரஸ் சர்க்கார் என்ன திட்டம் போட்டிருந்தாலும் அவர்களை அந்தத் திட்டத்தை நிறைவேற்ற செய்யாமல் ஆக்கவேண்டும் என்ற நோக்கத்தோடு, உண்மைக்குப் புறம்பாக துவேஷத்தை பரப்பி வருகிறார்கள். இதன் காரண மாக அண்டை மாநிலத்திலுள்ள மக்களுக்கும் நம் மாநிலத் திலுள்ள மக்களுக்கும் இடையே துவேஷத்தை ஏற்படுத்திவிட் டால், இந்த நாட்டிலுள்ள காங்கிரஸ் சர்க்கார் மீது அவர்களுக்கு வெறுப்பு ஏற்படும்படி செய்து விடலாம் என்ற நினைப்பில் வேலை செய்து கொண்டிருக்கிறார்கள் என்பதை நாம் கண் கூடாகப் பார்த்துக்கொண்டிருக்கிறோம். இந்த நிலையில் அண்டை ராஜ்யங் களுடன் என்றென்றைக்கும் சகோதர பாசத்தோடு நாம் அனை வரும் நடந்து கொள்ள வேண்டுமென்று மிகவும் பணிவன்போடு கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, போராட்டம் போராட்டம் என்று சொல்லு கிறார்கள். போராட்டம் எப்படி ஆய்விட்டது என்பதை சமீபத் தில்தான் நாம் பார்த்தோம். போர் எல்லாம் ஆட்டம் கண்டு விட்டது. எந்த ராஜ்யத்தில் யாரோடு நாம் போராடுவது என்பதுதான் இப்போது தெரியவில்லை. மத்திய சர்க்கார் ஊழியர்களின் போராட்டம் சமீபத்தில்தான் ஆட்டம் கண்டது. அதன் பின்னும் நாங்கள் போராட்டம் நடத்துவோம் என்று சொல்லுவதைப் பார்க்கும்போது விசித்திரமாகத்தான் இருக் கிறது. இந்தி மொழியை இந்த நாட்டில் கொண்டு வந்தால் நாங்கள் போராட்டம் நடத்துவோம் என்று சொல்லிக்கொண் டிருக்கிறார்கள் ஒரு சிலர். யார், யார் மீது இந்தியைத் திணிக் கிறார்கள் என்று தெரியவில்லை. இந்தி படிக்கவேண்டும் என்று நான் விரும்பினால் கூடாது என்று சொல்வதற்கு நீ யார் என்று கேட்கிறேன். இந்த நாட்டு மக்கள் இந்தி படிக்கவேண்டும் என்றால் அதை எதிர்ப்பதற்கு நீ யார் என்று கேட்கிறேன்.

**Sri P. U. SHANMUGAM :** ஸார், பாயின்ட் ஆப் ஆர்டர், தங்களைப் பார்த்து அடிக்கடி 'நீ' என்று குறிப்பிடுவது முறை தானா என்று கேட்க விரும்புகிறேன்.

DEPUTY SPEAKER : It does not refer to the Chair.

**Sri J. MATHA GOWDER :** யார் எதிர்க்கிறார்களோ அவர்களைத் தான் குறிப்பிடுகிறேன்.

**Sri M. KARUNANITHI :** பாயின்ட் ஆப் ஆர்டர், 'நீ' என்று குறிப்பிடுவது மரியாதை தானா?

DEPUTY SPEAKER : I said that it did not refer to the Chair.

9th August 1960]

**Sri J. MATHA GOWDER:** சேரன் செங்குட்டுவன் தமிழில் எனக்குப் பேசத் தெரியாது. எனக்குத் தெரிந்த தமிழில் தான் என்னால் பேச முடியும். கவர்னர் பெருமான் அவர்கள் நேரு அவர்கள் குறிப்பிட்டதைப்பற்றி சொல்லியிருக்கிறார்கள். ஒரு மொழியைப்பற்றி பேசும்போது, அந்த மொழியை புதிதாக கொண்டுவரும்போது அதற்கு எந்த விதமான இடையூறும் இல்லாமல் பார்த்துக்கொள்ள வேண்டும் என்று சொல்லியிருக்கிறார்கள். ஒரு சொல்லுக்கு தமிழ் வார்த்தை கண்டுபிடிக்க வேண்டும் என்ற எண்ணத்தில் பல நூற்றாண்டுகளுக்கு முன்னால் போய் பழைய வார்த்தையை இப்போது நாம் தேடிக்கொண்டிருக்கிறோம். சைக்கிள் என்ற வார்த்தையை எடுத்துக்கொண்டால், அது மக்களுக்கு இப்போது நன்றாகப் புரிந்திருக்கிறது. அதை விட்டு விட்டு, சேரன் செங்குட்டுவன் காலத்திலுள்ள வார்த்தையை பொறுக்கி எடுத்து துவிச் சக்கர வண்டி என்று வைக்கவேண்டும் என்று சொல்லுகிறோம். இது திடீரென்று ஒருவருக்கும் புரிவதில்லை. இதை விட்டு விட்டு, சைக்கிளினால் இப்போது இருப்பதை விட இன்னும் என்னவெல்லாம் அனுகூலம் ஏற்படும், இப்போது இருக்கின்ற ஃப்ரிவில்-லை மாற்றினால் இன்னும் அதிகமான அளவில் ஏதாவது பயன் கிடைக்குமா என்கிற ஆராய்ச்சியில் ஈடுபட்டால் நன்றாக இருக்கும். அதல்லாமல் துவிச்சக்கர வண்டி என்று எப்படி பெயர் வைக்கலாம் என்பதற்காக பழைய ஏடுகளை புரட்டிக் கொண்டிருப்பது நல்லதல்ல என்பதை மிக மிக வருத்தத்தோடு சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன். அதை நாம் மனதில் வைத்துக்கொள்ளவேண்டும். பல நாடுகளின் மொழிகளையும் கற்றுக்கொள்ள நம் நாட்டு மாணவர்களுக்கு—தமிழ் நாட்டு மாணவர்களுக்கு—திறன் இருக்கிறது. நம்முடைய மாணவர்கள் திறன் இல்லாதவர்கள் என்று சொல்லக்கூடிய வகையில் இந்தி வேண்டாம், தமிழ் படித்தால் போதும் என்று சொல்லிக்கொண்டிருக்கிறோம் என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டும். வேறு நாடுகளுடன் தொடர்பு வைத்துக் கொண்டு அந்த நாட்டு மாணவர்கள் எந்த ஆராய்ச்சி செய்து கொண்டிருக்கிறார்கள், எவ்வளவு முன்னேறிப் போய்க்கொண்டிருக்கிறார்கள் என்று பார்ப்பதை விட்டுவிட்டு வார்த்தையை வைத்துக் கொண்டு பிரித்துக்கொண்டு போகும்போது, அவர்களோடு இருக்கக் கூடிய தொடர்பை அறுத்துக்கொண்டு போகிறோம் என்பதை மனதில் வைத்துக்கொள்ளவேண்டும் என்று சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன். இன்றைக்கு காலேஜில் படிக்கக் கூடிய மாணவர்கள் இந்தியும் படித்து, ஆங்கிலமும் படித்து, தமிழும் படித்தால் அவர்களுக்கு எதிர்காலத்தில் நல்ல வாய்ப்பு இருக்கிறது என்பதை உணர்ந்திருக்கிறார்கள். இந்தியைப் படிப்பது சரியல்ல என்று ஒரு கட்சிக்காரர்கள் தூண்டும்போது அந்த மாணவர்களுக்கு என்ன இடைஞ்சல்கள் ஏற்படும் என்று புரிந்து கொள்ளவேண்டும். குறிப்பாக 1948-ம் வருஷத்திலே கல்லூரிகளுக்கு சர்க்கார் பணம் கொடுக்கக் கூடாது என்று இன்றைக்கு இந்தி வேண்டாம் என்று சொல்லக் கூடியவர்கள்

[Sri J. Matha Gowder] [9th August 1960

சொல்லியிருக்கிறார்கள். அந்த நிலையில் பார்க்கும்போது 1948-ம் வருஷததிலே கல்லூரிக்கு சர்க்கார் பணம் கொடுக்கக் கூடாது என்று இன்றைக்கு திராவிட முன்னேற்றக் கழகத்தினர் என்று சொல்லக் கூடியவர்கள் சொன்ன வாதத்தை ஒப்புக் கொண்டிருந் தால் ஏழை மாணவர்கள் படித்து பட்டம் பெற முடியுமா என்று சிந்தித்துப் பார்க்கவேண்டும். இவர்கள் வாதத்தை எடுத்துக்கொண்டு கல்லூரிகளுக்கு சர்க்கார் பணத்தை செலவழிக்காமல் இருந்திருந்தால் பட்டம் பெற்ற மாணவர்களைப் பெற முடியாத நிலை ஏற்பட்டிருக்கும் என்பதைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். இன்றைக்கு இவர்கள் படிக்கக் கூடாது என்று சொல்வார்கள். பத்து ஆண்டுகள் கழித்து இந்தியின் முக்கியத் துவம் தெரிந்த பிறகு இவர்கள் ஏமாற்றி விட்டார்கள் என்று அந்த மாணவர்கள் நினைப்பார்கள். இந்த நிலைமையை மாணவர்கள் இப்போதே உணர்ந்திருக்கிறார்கள் என்று சொல்ல விரும்புகிறேன். ஆகையால்தான் மாணவர்கள் இந்தி படிக்கத் தயாராக இருக்கிறார்கள்.

அடுத்தபடியாக தொழிலாளர் பிரச்னையில் ஒரு சில வார்த்தைகள் பேச ஆசைப்படுகிறேன். நேற்று ஒரு அம்மையார் பேசினார்கள். தொழிற் சங்கத்தில் தொழிலாளர்கள்தான் தலைவர்களாக இருக்கவேண்டுமே தவிர இதரர் இருக்கக் கூடாது என்று. அரசியல் நோக்கத்தோடு போய் குழப்பம் விளைவித்து சர்க்காரைப் பழி வாங்கும் நோக்கத்தில் போனால் அங்கு மாத்திரம் தடுக்க வேண்டுமே தவிர, வேறு இடங்களில் தொழிலாளரல்லாதார் இருக்கக்கூடாது என்று சொல்வது பொருத்தமல்ல என்று சொல்ல ஆசைப்படுகிறேன். ஏன் என்று கேட்டால், சாதாரணமாக இன்றைக்கு முதலாளியின் வஞ்சம் தீர்க்கும் படலம் இன்னும் மாறவில்லை. சாதாரண கூலி வேலை செய்யக்கூடிய தொழிலாளியை தொழிற்சங்கத் தலைவராகச் செய்து விட்டால் அவனை சங்கத்திலிருந்து நீக்குவது மாத்திர மல்லாமல் வேலையிலிருந்தே நீக்கி விட்டு அவன் சங்கத் தலைவராக இருக்க முடியாமல் செய்து விடுவார்கள் முதலாளிகள். தொழிற் சங்கச் சட்டத்தில் தொழில் கோர்ட்டில் வக்கீல் வைத்து நடத்தக் கூடாது என்று இருக்கும்போது பாமரத் தொழிலாளிக்கு தொழில் கோர்ட்டில் வக்கீல் இல்லாமல் தகராறைத் தீர்த்துக்கொள்ள சக்தி இருக்கிறதா என்று எண்ணிப் பார்த்தால், இன்றைக்கு இருக்கக்கூடிய முதலாளிகளின் மனப்பான்மை மாறி நாட்டி லுள்ள தொழிலாளிக்கு எந்தத் தவறும் செய்வதில்லை என்று கூறி அத்தகைய நிலை ஏற்பட்டாலொழிய வெளியில் இருப்பவர்கள் தொழிற் சங்கத் தலைவர்களாக இருப்பதில் தவறில்லை என்று சொல்லி முடித்துக்கொள்கிறேன்.

* **Sri R. KRISHNASAMI NAIDU**: **கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கவர்னர் பெருமான் அவர்கள் இந்தச் சட்ட சபையிலே நிகழ்த்திய உரையின் மீது, அதைப் பாராட்டு வதற்காகக் கொண்டுவரப்பட்ட தீர்மானத்தை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன்.**

9th August 1960] [Sri R. Krishnasami Naidu]

கவர்னர் பெருமான் சட்ட சபையில் உரை நிகழ்த்தும்போது அந்தந்த ராஜ்யத்திலே உள்ள பொதுவான நிலைமையைப்பற்றி சுருக்கமாகக் குறிப்பிடுவது என்பது ஒரு சம்பிரதாயம். அதே முறையில்தான் நமது சட்ட சபையிலேயும் உரை நிகழ்த்து கிறார்கள். அவர்கள் உரையிலே இன்னின்ன விஷயங்கள் எல்லாம் சொல்லாமல் விட்டுவிடப்பட்டிருக்கிறது என்று எடுத்துக் காட்டுவது என்பது சம்பிரதாயமாகப் போய்விட்டது. முக்கியத் துவம் வாய்ந்த விஷயங்களைக் குறிப்பிடுவதே உகந்த சம்பிர தாயமாக இருக்க முடியும். அவரவர்கள் தங்கள் மனதில் எதை யெல்லாம் நினைத்துக்கொண்டிருக்கிறார்களோ அதையெல்லாம், அவர்கள் மனதிலுள்ளதையெல்லாம், இவர் சரிவரத் தெரிந்து கொண்டு, யார் யார் எதை எதை எடுத்துக் காட்டக்கூடும் என்று யோசித்து அதையெல்லாம் சேர்த்து உரை நிகழ்த்துவது சம்பிரதாயமாகாது என்பதை உணரவேண்டும்.

கவர்னர் பெருமான் இப்போது இந்தக் கூட்டத்தில் பேசிய உரையானது கவர்னராக வந்ததற்குப் பின் பேசிய பேச்சுக்களை விட நல்ல முறையில் அமைந்திருக்கிறது என்பதை எல்லோரும் வரவேற்க வேண்டும். முக்கியமாக சமீப காலத்திலே நிகழ்ந்த விரும்பத்தகாத நிகழ்ச்சிகளைப் பற்றியெல்லாம் மிகவும் அடக்க மான முறையில் ஒரு சில வார்த்தைகளில் கூறியிருக்கிறார். சமீபத்திலே ஏற்பட்ட வேலை நிறுத்தம் நாட்டு முன்னேற்றத்திற்கு உகந்ததாக ஆகாது. தீய சக்திகள் தூண்டிவிட்டு இந்த வேலை நிறுத்தம் ஏற்பட்டது. தொழிற் சங்கங்கள் என்று கூறிக் கொள்ளும் தொழிற் சங்கத் தலைவர்கள் எந்த வகையிலேனும் ஒரு சங்கத்தைவிட இன்னொரு சங்கம் செல்வாக்குப் பெற்று, தானே ஆதிக்கம் பெற முந்திக்கொண்டு காரியம் செய்ததன் மூலமாக மத்திய சர்க்கார் ஊழியர்கள் இந்தக் கஷ்டத்திற்கு ஆளானார்கள் என்பதில் சந்தேகமில்லை. அந்த முறையில் அவர்கள் வஞ்சிக்கப் பட்டு அவர்கள் பெறக்கூடிய நன்மைகளும் கிடைக்காமல் பொது மக்களும் அவர்களைப்பற்றிய நல்லெண்ணங்களை மாற்றிக் கொள்ளக்கூடிய வகையில் அவர்கள் நடந்துகொண்டு விட்டார்கள். தூண்டுதல் காரணமாக நாட்டு முன்னேற்றத்தைப்பற்றி உணரக் கூடத் தவறி விட்டார்கள். இருந்தாலும் பெரும்பாலான தொழிலாளர்கள் நாட்டு முன்னேற்றம், பொது மக்களின் கருத்து ஆகியவைகளை கருத்திற்கொண்டு இந்த வேலை நிறுத்தத் தில் ஈடுபடாமலிருந்தது பாராட்டுக்குரியது. பொதுமக்கள் இந்த வேலை நிறுத்தத்திற்கு எந்த விதமான ஆதரவும் கொடுக்க வில்லை. வேலை நிறுத்த காலத்தில் எதிர் கட்சிப் பத்திரிகைகள் கொட்டை எழுத்தில் நாடே ஸ்தம்பித்து விடப்போகிறது அரசாங்கமே ஸ்தம்பித்து விடப்போகிறது என்று செய்திகளை வெளியிட்டுக்கொண்டிருந்தார்கள். உண்மையாக செய்திகளை வெளியிடும் நடு நிலைமைப் பத்திரிகைகளைக் கூடத் தவறான செய்திகளை வெளியிட்டுக்கொண்டிருக்கிறார்கள் என்று கொட்டை எழுத்துக்களில் எழுதிக் கொண்டு வந்தன. எந்தப் பத்திரிகை எழுதிய செய்தி வாஸ்தவமானது என்பதை பின்னால் தெரிந்து கொண்டோம், அவர்கள் பத்திரிகைகளில் எழுதிக்

கொண்டு இருந்தது உண்மையாக இருந்தால் இந்திய அரசாங்க யந்திரம் ஸ்தம்பித்துப் போயிருக்கவேண்டும். அந்த அளவுக்கு தலையங்கங்கள் எழுதிக்கொண்டு வந்தன. இவ்வாறாக நாட்டினுடைய நன்மையைப்பற்றிக் கவலைப்படாமல் ஆளும் கட்சியினருக்கு எவ்விதமான இடையூறுகளைக் கொடுப்பது என்பதையே பிரதான நோக்கமாகக் கொண்டிருக்கிறார்கள்.

மொழிப் பிரச்னை சம்பந்தப்பட்ட மட்டில் மூன்றாவது பாஷையாக இன்ன பாஷை என்று குறிப்பிடாவிட்டாலும் கூட எல்லா பாஷைகளையும் கற்றுக்கொள்ள வசதி செய்து கொடுக்கப்பட்டிருக்கிறது என்றும் இந்திக்கு ஆதரவு அதிகமாக இருப்பதன் காரணமாக அதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருப்பதாகவும் மற்ற பாஷைகளைக் குறைந்தபட்சம் கணிசமானவர்கள் படிக்க முன் வரும்போது அதற்கான ஏற்பாடுகளைச் செய்து கொடுப்பதாகவும் நிதி மந்திரியவர்கள் கூறினார்கள். "இந்தி இங்கே தலை காட்டக் கூடாது; மற்ற எந்த பாஷையாவது வந்து விட்டுப் போகட்டும்; தாங்கள் எதிர்க்கும் இந்தி மொழி இந்த மாநிலத்திலே தங்களால் தடுக்கப்பட்டு விட்டது" என்ற பிரசாரத்தைச் செய்வதற்காக இந்த உபாயத்தை அவர்கள் கையாளுகிறார்கள். இந்தியை மூன்றாவது பாஷையாக அதிகமான பேர்கள் தெரிந்து கொண்டிருக்கிறார்கள். அது அதிகமான பேர் பேசக் கூடிய பாஷையாக இருக்கிறது. அப்படிப்பட்ட ஒரு பாஷையைப் படிப்பதை ஏன் தடுக்கவேண்டும்? இப்படிப்பட்ட ஒரு குறுகிய மனப்பான்மையுடன் கூடிய கொள்கைகளைக் கொண்ட ஒரு கட்சி தமிழ் நாட்டில் இருப்பது பெரிய துரதிருஷ்டமாகும். இது தமிழ் நாட்டுக்கே பேரவமானமாகும். அத்தகைய முறையில் அவர்கள் குறுகிய எண்ணங்களைத் தங்களுடைய கொள்கைகளாக வகுத்துக் கொண்டிருக்கிறார்கள். மருமகள் மஞ்சள் பூசிக் கொள்கிறாள்; கணவனுக்குப் பிரியமாக சிங்காரித்துக் கொள்ளுகிறாள் என்று மாமியார் அவள் மீது பொறாமை கொண்டு "இவள் தாலியறுக்கவேண்டும்; இவள் மொட்டையடித்துக்கொள்ள வேண்டும்; முக்காடு போட்டுக்கொண்டு வர நான் பார்க்க வேண்டும்; என்று குறுகிய மனப்பான்மையில் எப்படிக் கூறுவாளோ அதைப் போல் . .

**SRI A. GOVINDASAMY:** சட்டசபையில் "கம்மநாட்டி" என்ற வார்த்தையைப் பயன்படுத்துவது . . .

**DEPUTY SPEAKER:** பேசும்போது அந்த வார்த்தையைப் பயன்படுத்த வேண்டாம்.

**SRI R. KRISHNASAMY NAIDU:** அந்த மாமியார் மருமகளை நினைக்கிற மாதிரி என்று சொன்னேனே தவிர ஒரு கட்சியைக் குறிப்பிடுவதாகாது. இந்த நாட்டுக்கு எது நன்மை பயக்கத் தக்கது, எது தீமை பயக்கத்தக்கது என்று ஆராய்ந்து காரியங்களை அணுகுவதாகத் தெரியவில்லை. இவர்கள் நாட்டின் எதிர்கால சுபிட்சத்தை மனதிலே கொள்ளாமல் நாட்டிலே சுபிட்சத்தை

9th August 1960] [Sri R. Krishnasami Naidu]

உண்டாக்கவேண்டுமென்ற யோசனையோடு காரியம் ஆற்றுமல் தீமையான செயல்களில் ஈடுபடுவது மிகவும் விசனிக்கத்தக்கது என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

பல திட்டங்களைப் பற்றி கவர்னர் பெருமான் முக்கியமாக இங்கு குறிப்பிட்டிருந்தார்கள். உணவுப் பொருள்களின் விலை ஏற்றம் பற்றியும் அவர் குறிப்பிட்டிருக்கிருர். இந்த விலை யேற்றத்தைத் தடுப்பதற்கான பல யோசனைகளை இங்கே பேசுகிற வர்கள் கொடுத்திருந்தால் வரவேற்கத்தக்கதாக இருந்திருக்கும். இந்த விலையேற்றம் சம்பந்தப்பட்ட வரையில் நிச்சயமாக நானும் மனக் குழப்பம் அடைந்திருக்கிறேன் என்பதை ஒப்புக் கொள்ளு கிறேன். எதிர்க் கட்சிக்காரர்கள், "இந்த அரசாங்கம் விலை யேற்றத்தைத் தடுப்பதற்கான திட்டங்களை வகுக்கத் தவறி விட்டது, இந்த அரசாங்கம் வீண் தம்பட்டம் அடித்துக் கொள் கிறது' என்ற முறையில் பேசக்கூடிய பேச்சுக்கள் உபயோகமற்ற பேச்சுகள் என்று குறிப்பிட விரும்புகிறேன். நல்ல யோசனை களைக் குறித்துப் பேசுவதில் அர்த்தமிருக்கிறது. அவ்வாறு யோசனைகளை எடுத்துக் கூறிப் பேசாது வெறுமனே இதைச் செய்யவில்லை அதைச் செய்யவில்லையென்று பேசுவதில் உபயோக மில்லையென்று தெரிவித்துக் கொள்கிறேன்.

தமிழ் நாட்டைப் பொறுத்தமட்டில் இங்குள்ள முக்கிய ஜல தாரங்களில் எல்லாம் அணைக்கட்டுகள் கட்டப்பட்டு பல பகுதி களுக்கு பாசனத்திற்கு வசதி செய்து தரப்பட்டிருக்கிறது. இந்த வகையிலும் எதிர்க்கட்சிகள் . . .

**DEPUTY SPEAKER :** உங்களுடைய நேரம் முடிந்து விட்டது.

*** SRI V. K. KOTHANDARAMAN:** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, மேன்மை தங்கிய கவர்னர் பெருமான் அவர்களுடைய உரையானது, என்னைப் பொறுத்த வரையில் சொல்லவேண்டு மானல், பாராட்டுதலுக்கு உரிய உரையல்ல என்றுதான் சொல்ல வேண்டும். வேண்டுமானல் துதி பாடக் கூடியவர்கள் இந்த உரையை ஆதரித்து, இதைப் போல் உரை வேறு எதுவுமே இல்லை யென்று சொல்லலாம். இந்த உரையிலே எடுத்துச் சொல்லப் பட்ட பல அம்சங்கள் இன்றைக்குப் புதிதாகக் கண்டு பிடித்துச் சொல்லப்பட்டவையல்ல. இதற்கு முன்னல் நீண்ட நெடும் காலமாகக் கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில் நாங்கள் சொல்லிக் கொண்டு வந்ததை, "இவர்கள் சொல்வதா, நாங்கள் கேட்பதா"? என்ற நிலையில் இருந்தவர்கள் இன்றைக்கு அவற்றில் சில அம்சங் களை ஒப்புக்கொள்ளக் கூடிய முறையிலே எடுத்துச் சொல்லியிருக் கிருர்கள். இவ்வளவு நீண்ட காலத்திற்குப் பிறகாவது உண்மையை உணர்ந்தார்களே என்பதற்காகத்தான் பெருமைப் பட வேண்டுமே தவிர மற்றபடி இந்த உரையிலே புதிதாக ஒன்றும் கிடையாது. விலைவாசிகளைக் குறைக்கவேண்டுமென்று கம்யூ னிஸ்ட் கட்சியின் சார்பிலே மட்டுமல்லாது எல்லா எதிர்கட்சிகளும் சேர்ந்து இந்தத் தமிழ் நாட்டிலே கிளர்ச்சி செய்தது. அன்று இதை உணரக்கூடிய சக்தி இந்த அரசாங்கத்திற்கு இல்லை.

[Sri V. K. Kothandaraman] [9th August 1960

அதைத்தான் இன்று கவர்னர் உரையிலே குறிப்பிட்டிருக்கிறுர். இந்த விலைவாசிகளை ஏன் கட்டுப் படுத்தவில்லையென்று சொல்லக் கூடிய நேரத்தில் மதிப்பிற்குரிய கனம் அங்கத்தினர் ஸ்ரீநிவாச அய்யர் அவர்கள் ரத்தக் கண்ணீர் வடித்தார். "விவசாயிகளைப் பற்றி யாருமே எண்ணிப் பார்க்கமாட்டேன் என்கிறுர்கள்" என்று மிகுந்த அனுதாபத்துடன் பேசினுர். நான் சொல்கிறேன்—அவர் நிலப் பிரபு, மிட்டா மிராசுதாரர் என்ற நிலையிலிருந்து விவசாயி என்று பார்க்கிறுர். நாங்கள் சொல்வதைப் போல் சாதாரண விவசாயிகளுடைய நிலைமை என்ன, விலைவாசி உயர்வின் பலனை அவர்கள் அடைகிறுர்களா என்பதை எண்ணிப்பார்க்கவேண்டும். இந்த விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்திஞல் வியாபாரிகளும், பதுக்கல்காரர்களும் நிலப் பிரபுக்களும்தான் பாதிக்கப்படுவர்.
12-30 p.m. ஆகவேதான், விலைவாசியைக் கட்டுப்படுத்தவேண்டுமென்று நாம் சொல்கிறோம். நான்கு வருஷ காலத்தில் இந்த அளவுக்கு விலை வாசி உயர்ந்திருக்கிறதென்றுல், அதற்குக் காரணம், பதுக்கி வைத்தது மாத்திரம் அல்ல, மேலும் சொல்லவேண்டுமாஞல், புதிய நோட்டுகளை அச்சடித்து, அவைகளை எப்படியாவது மார்க் கட்டிலே செலாவணி செய்யவேண்டுமென்ற நோக்கத்தோடு, ஒன்றுக்கு இரண்டு மடங்காக, — ரூ. 20, ரூ. 25 மூட்டை விலை என்றுல், ரூ. 50, ரூ 60 என்று விலை கொடுத்து நெல் வாங்கக் கூடிய அளவுக்கும், மிளகாய் வற்றல் வாங்கக் கூடிய அளவுக்கும், கண் மூடித்தனமாக நோட்டுகளைக் கொடுத்து வாங்குகிறுர்கள். சர்க்காரிலே எந்த அளவு நோட்டு அடித்தால் நல்ல முறையிலே விலைவாசி இருக்கும் என்று உணராத தன்மையில் மேலும், மேலும் புதிய நோட்டுகளை அச்சடிக்கும் அளவுக்கு இருக்கும் காலத்திலே தான், சர்க்காரைச் சேர்ந்திருக்கும் முதலாளிகளும் அச்சடிக் கிறுர்கள் கள்ளத்தனமாக. இதெல்லாம் கூட . . . .

**Sri R. KRISHNASAMY NAIDU:** சர்க்காரைச் சேர்ந்த எந்த முதலாளிகள் அச்சடித்திருக்கிறுர்கள் என்று அவர் தைரியமாகச் சொல்லமுடியுமா ?

**Sri V. K. KOTHANDARAMAN:** இப்பொழுது பிடிக்கப் பட்டிருக்கிறவர்கள் அத்தனை பேரும் சர்க்காரைச் சேர்ந்தவர்கள். சர்க்காரைச் சேர்ந்தவர்கள் அல்ல என்று கனம் அங்கத்தினரால் சொல்ல முடியுமா ?

**Sri R. KRISHNASAMY NAIDU:** ஒரு பெயரை தைரியமாகக் குறிப்பிட்டுச் சொல்ல முடியுமா ?

**Sri V. K. KOTHANDARAMAN:** காங்கிரஸ்காரர்கள் தான்.

**Sri R. KRISHNASAMY NAIDU:** பெயர் என்ன என்று சொல்ல முடியுமா ?

**DEPUTY SPEAKER:** கனம் அங்கத்தினர் தொடர்ந்து பேசலாம்.

9th August 1960]

**SRI M. R. KANDASAMY MUDALIAR:** நான் சொல்கிறேன், கோயமுத்தூரில் கள்ள நோட்டு அச்சடித்தவர்கள் கம்யூனிஸ்டுகாரர்கள் என்று. இதை நான் தாராளமாகச் சொல்கிறேன்.

DEPUTY SPEAKER: கனம் அங்கத்தினர் கோதண்டராமன் தொடர்ந்து பேசலாம்.

**SRI V. K. KOTHANDARAMAN:** பகிரங்கமாகப் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். அதற்கு உடந்தையாக இன்றைக்கு அதிகாரிகளும் இருந்திருக்கிறார்கள். போலீஸ் அதிகாரி வீட்டிலே 6 லட்சம் சொச்சம் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. இதற்கெல்லாம் காரணம் . . .

DEPUTY SPEAKER: The case is under investigation and the hon. Member need not refer to it further.

**SRI V. K. KOTHANDARAMAN:** இதற்கெல்லாம் காரணம், இன்றைக்கு மாகாண ரீதியிலே அமைச்சர்கள் போகக்கூடிய நேரத்திலே முதலாளிகளுடைய பங்களாக்களிலே தங்கக்கூடிய காரணத்தினாலும், மாகாண அதிகாரிகள் முதலாளிகளுடைய பங்களாக்களிலே தங்கக்கூடிய காரணத்தினாலும்தான் இவர்களுடைய உற்சாகமும், இவர்களுடைய தைரியமும் இருந்துகொண்டு இப்படிக் கண்டுபிடிக்க முடியாத அளவுக்கு கள்ளத்தனமான காரியங்களிலே ஈடுபடக்கூடிய நிலைமை இருக்கிறது. இதைக் குறிப்பாக ஏன் சொல்கிறேன் என்றால், இதைப்போன்ற காரணத்தினாலே விலைவாசி உயர்ந்துகொண்டு போகிறது. இதை மூடி மறைப்பதற்குத்தான் இன்றையதினம் இவர்கள் 'கவனிப்பது இல்லை, கொஞ்சம் கூடக் கவலைப்படுவது இல்லை, நாங்கள்தான் கவலைப்படுகிறோம்' என்று இரத்தக் கண்ணீர் வடிக்கக்கூடிய நிலைமை இருக்கிறதே, அது எதிர்க் கட்சி சொல்லிக்கொண்டுவந்ததுதானே தவிர, புதியதாக ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்கள் சொல்வது அல்ல. (ஸ்ரீ ஆர். கிருஷ்ணசாமி நாயுடு—குறுக்கீடு) உள்ளதைச் சொன்னால் நொள்ளைக் கண்ணனுக்குக் கஷ்டமாகத்தான் இருக்கும். அது போல், உண்மையைச் சொன்னவுடனே கவலையாக இருக்கிறது. இதுபோன்று மத்திய சர்க்கார் ஊழியர்களுடைய போராட்டம் நடந்த நேரத்திலே, சர்க்காருக்கு உண்மையிலேயே சட்டத்தின் பேரிலே நம்பிக்கை கிடையாது; போலீஸ் பேரிலும் நம்பிக்கை கிடையாது. போலீஸ் பேரில் நம்பிக்கை இருந்தது என்றால், இந்தச் சட்டத்தைத் தலைகீழாக மாற்ற முயற்சிக்க மாட்டார்களே. போலீஸ் இவர்கள் கையில் இருக்கிறது; துப்பாக்கி, தடி இருக்கிறது; அதைத் தாராளமாக உபயோகப்படுத்திப் பாருங்களேன். அதன்பேரில் நம்பிக்கை இல்லாததால் சட்டத்தை மாற்றவேண்டுமென்ற நிலைமை வந்திருக்கிறது. இப்படிப் போராட்டத்தைச் சுமுகமான முறையில் முடித்ததற்குக் காரணம், போலீஸ்காரர்கள். ஆகவே நன்றி என்று சொல்கிறார்கள். என்ன சுமுகமான முறையில் முடிந்திருக்கிறது என்று

[Sri V. K. Kothandaraman] [9th August 1960

விசாரித்துப் பார்த்தால் உண்மை தெரியும். வீட்டிலே நுழைந்து தடியைக்காட்டி ஆண்களையும், பெண்களையும் பதறப் பதற அவர்களை விரட்டி, மிரட்டி, வாயிலே வந்ததையெல்லாம் பேசியிருக்கிறார்கள் போலீஸ்காரர்கள் என்பதற்கு அந்தந்த உத்தியோகஸ்தர்களின் வீட்டிலுள்ள தாய்மார்களைக் கேட்டால் தெரியும். ஆண்டவன் பேரில் பக்தியும் நம்பிக்கையும் இருக்கிறதாகச் சொல்கிறார்களே, அவர்கள், அந்த உத்தியோகஸ்தர்களின் வீட்டில் என்ன வார்த்தைகள் உபயோகப்படுத்தப்பட்டிருக்கிறது போலீசாரால், என்று விசாரித்தால் தெரியும். ஆகவே போலீசாரின் தடிகளுக்கு நன்றி செலுத்துங்கள். அதில் அர்த்தமிருக்கிறது.

THE HON. SRI P. KAKKAN: கம்யூனிஸ்டுக் கட்சிக்குத்தான் ஆண்டவன் பேரில் நம்பிக்கை இல்லையே.

SRI V. K. KOTHANDARAMAN: எங்களுக்கு நம்பிக்கை இருக்கிறதோ இல்லையோ, ஆண்டவன் பேரில் நம்பிக்கை இருக்கிறதாகச் சொல்லக்கூடியவர்கள், அந்தப் பெயரைச் சொல்லி ஏமாற்றக்கூடிய நிலைமை இருக்கிறது என்பதற்காகத் தான் குறிப்பிடுகிறேன். ஆகவேதான், இவ்வளவு மோசமான நிலைமையில் போலீஸ்காரர்கள் அவர்களை அடக்கி ஒடுக்கினதற்கு நன்றி என்று சொல்லலாமே தவிர, மற்றபடி சுமுகமான முறையில் நடக்கவில்லை.

ஹரிஜன ரட்சகர்கள், ஹரிஜன மக்களுடைய வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்காக வேண்டி, எத்தனை கோடி ரூபாய் ஒதுக்கியிருக்கிறோம் பார்த்தீர்களா என்றும், வீடு கட்டிக் கொடுத்திருக்கிறோம் என்றும் சொல்லக் கூடிய நமது சர்க்கார் இன்றைய தினம் நமது சர்க்கார் சிப்பந்திகளுக்கு என்று சம்பளக் கமிஷன் நியமித்திருக்கிறது. அந்தச் சம்பளக் கமிஷன் என்ன அறிக்கை தந்திருக்கிறது? ஸ்தல ஸ்தாபனங்களில் வேலை செய்யக்கூடிய சிப்பந்திகளுக்கு எந்த அளவு சம்பளம் என்பதைப் பார்த்தால், 'மினிஸ்ட்டீரியல் ஸ்டாப்' தவிர மற்றவர்கள் அத்தனை பேருக்கும் இந்த சென்னை சர்க்கார் ஊழியர்கள் சம்பளம் அனுமதிக்கப்பட்டுள்ளது. அதே நேரத்தில், நம்மை நல்ல முறையில் ஆரோக்கியமாகவும், நமக்கு எந்த நோய் நொடியும் வராமல் நாம் சந்தோஷமாக இருக்கவேண்டும் என்பதற்காக மல ஜலங்களை அள்ளும் நகரசுத்தித் தொழிலாளர்களைப்பற்றி சம்பளக் கமிஷன் அறிக்கையிலே என்ன சொல்லியிருக்கிறது? அவர்கள் முழு நேர ஊழியர்கள் அல்ல என்றும், அவர்கள் பகுதி நேர ஊழியர்கள் என்றும் குறிப்பிடப்பட்டிருக்கிறார்கள். ஐந்து வருஷ சர்வீசுக்கு மேல் இருந்தால் அவர்களை முழு நேர ஊழியர்களாக்குங்கள் என்கிறார்கள். ஸ்தல ஸ்தாபனங்களின் நிதி நிலைமை சரியில்லை என்று சொல்கிறார்கள். சாதாரணமாக ஒரு சர்க்கார் ஊழியருக்குக் குறைந்த பட்சம் 60 ரூபாயாவது சம்பளம் இருக்க வேண்டுமென்கிறது. அவர்களைப்போல், நகரசுத்தித் தொழிலாளர்கள் இருக்கிறார்களே, அவர்களுக்கும் வயிறு ஒன்று தான்.

9th August 1960] [Sri V. K. Kothandaraman]

அவர்களுக்கு ஐந்து ரூபாய் கொடுக்கவேண்டும் என்று அதிலே குறிப்பிட்டிருக்கிறது. 60 ரூபாய்க்குக் குறைவு இல்லாமல் மாதச் சம்பளம் நகர சுத்தித் தொழிலாளர்களுக்கும் கொடுக்கவேண்டும் என்று நான் தெரிவித்துக்கொள்கிறேன். ஸ்தல ஸ்தாபனங்களில் பணம் இருக்கிறதா இல்லையா என்ற பிரச்னை வரக்கூடாது. அவர்களிடம் பணம் இல்லையென்றால், மாகாண சர்க்கார் கொடுக்க வேண்டும். மாகாண சர்க்காருக்கு நிதி நிலைமை மோசமாக இருக்கிற நேரத்தில் எப்படி மத்திய சர்க்காரிடத்திலே கேட்டு வாங்குகிறார்களோ அதுபோல் இந்த சர்க்கார் அந்த ஸ்தல ஸ்தாபனத்திற்குக் கொடுத்து உதவி செய்யவேண்டும். அந்த முறையிலே இன்றைக்கு ஹரிஜன மக்களுக்கும் நகரசுத்தித் தொழிலாளிகளுக்கும் 60 ரூபாய்க்குக் குறையாத சம்பளம் கொடுப்பதற்கான ஏற்பாட்டை உடனடியாகச் செய்யவேண்டும். அப்படிக் கொடுக்காமல் மத்திய சர்க்கார் சிப்பந்திகளைத் தடியால் அடித்து அடக்கிவிட்டோம் என்று சொல்லி நகரசுத்தித் தொழிலாளிகளை, தாழ்த்தப்பட்ட தொழிலாளிகளைத் தடியால் அடித்தால், மலத்தால் அடிப்பேன் என்று சொல்லிக் கண்டிப்பாகச் சமாளிக்கக்கூடிய அளவுக்குத் தொழிலாளிகளுக்குச் சக்தி உண்டு.

THE HON. SRI P. KAKKAN: பாயிண்ட் ஆப் ஆர்டர், ஸார். கனம் அங்கத்தினர் அவர்கள், 'தடியால் அடித்தால் மலத்தால் அடிப்பார்கள்' என்று சொல்லி, தப்பான எண்ணத்தை உண்டு பண்ணுகிறார்கள் இந்தச் சபையில். இவர்கள்தான் தொழிலாளிகளுக்கு வழிகாட்டக் கூடிய தலைவர்களா என்று கேட்கிறேன்.

SRI V. K. KOTHANDARAMAN: இது 'அன்பார்லமென்டரி' வார்த்தை அல்ல. 'பார்லிமென்டரி' வார்த்தை தான். இதில் ஒன்றும் தப்பே கிடையாது.

SRI M. R. KANDASAMY MUDALIAR: தலைவர் அவர்களே, சபையிலே பேசக்கூடிய நேரத்தில் ஒழுங்கு தவறிப் பேசக்கூடாது என்று சட்டசபை விதி இருக்கிற நேரத்திலே 'மலத்தால் அடிப்பார்கள்' என்று ஒரு கனம் அங்கத்தினர் பேசுவது யோக்கியப் பொறுப்புடனும் கண்ணியமான முறையிலும் பேசக்கூடிய பேச்சா என்று அறிய விரும்புகிறேன்.

DEPUTY SPEAKER: அது தவறான வார்த்தை அல்ல என்றாலும், அவர் உபயோகப்படுத்தியது தவறு என்பது என்னுடைய அபிப்பிராயம்.

SRI M. R. KANDASAMY MUDALIAR: அந்த வார்த்தையை அவர் வாபஸ் வாங்கிக்கொள்ளவேண்டும்.

DEPUTY SPEAKER: அந்த வார்த்தை 'அன்பார்லிமென்டரி' அல்ல. அந்த வார்த்தையை அவர் உபயோகப்படுத்தியது தவறு.

SRI V. K. KOTHANDARAMAN: பட்ஜெட் உரையில்கூட 'மலம்' என்ற வார்த்தை வந்திருக்கிறது. நான் அந்த வார்த்தையை உபயோகித்தது தப்பானால், பட்ஜெட் உரையில் நிதி

அமைச்சர் அவர்கள் 'மலம்' என்ற வார்த்தையை உபயோகித்ததும் தப்பாக இருக்கவேண்டும் என்பதையும் அவர்கள் மனதில் வைத்துக்கொள்ளவேண்டும்.

ஆகவே, ஏழை நகரசுத்தித் தொழிலாளிகளுக்குக் குறைந்த பட்சம் 60 ரூபாய் சம்பளமாவது கொடுப்பதற்கு ஏற்பாடு செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

DEPUTY SPEAKER : நேரம் ஆகிவிட்டது. இப்பொழுது திரு. நாகராஜ மணிகார் பேசுவார்.

**Sri M. R. KANDASAMY MUDALIAR:** பாயிண்ட் ஆப் இன்பர்மேஷன், ஸார். கனம் அங்கத்தினர் பேசிய நேரத்திலே கள்ள நோட்டு விஷயமாகக் குறிப்பிட்டார். ஆனால், உலகமே போற்றக் கூடிய உத்தமமான ஆட்சி நடந்ததாகச் சொல்கிறார்களே அந்த மலபார் ராஜ்யத்திலே, திரு. நம்பூதிரிபாத் காலத்திலே அங்கிருந்து வந்த கள்ள நோட்டு . . .

DEPUTY SPEAKER : மலபார் ராஜ்யத்தைப்பற்றிப் பேச வேண்டியதில்லை.

**Sri V. K. KOTHANDARAMAN:** அதற்கு நான் பதில் சொல்கிறேன்.

DEPUTY SPEAKER : Let the hon. Member resume his seat. Now, the hon. Member, Sri Nagaraja Monigar will speak.

* Sri S. NAGARAJA MONIGAR : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, கவர்னர் பெருமான் அவர்கள் ஆற்றிய உரைக்காக அவருக்கு வந்தனம் தெரிவிக்கும் முறையில் உள்ள தீர்மானத்தை ஒட்டி நானும் இரண்டொரு வார்த்தைகள் பேச விரும்புகிறேன். மேலும் மேலும் வந்தனம் செலுத்தவேண்டும் என்று கூட நான் ஒரு திருத்தம் சொல்வேன். ஆனால், அதற்குரிய காலம் நேற்றே சென்று விட்டது. ஏன் மேலும் வந்தனம் செலுத்தவேண்டுமென்றால், கவர்னர் பெருமான் அவர்கள் அந்த நிலையிலே இங்கே பதவி வகித்து சேவை செய்து வருகின்றார். இந்த நாட்டிற்கு விடுதலை கிடைத்து, 13 வருஷங்கள் ஆகியிருக்கிறது. இந்தியா பூராவுமே குறிப்பாக நமது ராஜ்யமும் திட்டமாக, அமைதியோடு, காந்திய வழியில் முன்னேறிக்கொண்டிருக்கும்போது, இதைக் கண்டு அன்னியர்களெல்லாம் வியப்புறுகிற போது, இங்கே உள்நாட்டிலே நிலைமை சற்று சரியில்லை; சனி, ராகு, கேதுக்கள் என்று சொல்லலாம். ராகு காலத்தைப்பற்றி இங்கே குறிப்பிட்டார்கள். ஆகையால், நான் கூறுவது மிகப் பொருத்தம் என்று நினைக்கிறேன். கொசுக் கடி, மூட்டைப் பூச்சிக் கடி, தேள் கடி, பாம்புக் கடியாக மாறி இங்கே நிலைமை கஷ்டத்திலே இருக்கிறது. ஒரு சாரார் உடன் பிறந்தே கொல்லும் வியாதி என்பதுபோல், வெளிநாட்டார் எப்படி நம்மை நினைத்தாலும், நிலைமையை மறந்தோ என்னவோ இன வெறி, ஜாதி வெறி, தமிழ், ஆந்திரம் என்று பேசி, ஜாதி வகைகளையெல்லாம் மனுவோ, ஆரியர்களோ, பிராமணர்களோ புகுத்திவிட்டார்கள் என்று சொல்லி அடுத்த நிமிஷத்திலேயே எவ்வளவு ஆழமாக

9th August 1960] [Sri S. Nagaraja Monigar]

தமிழ், தமிழர்கள், தமிழ் ஜாதி என்ற ஜாதி வெறியையும் இன வெறியையும் புகுத்த முடியுமோ அதிலே முனைந்துவிட்டிருக்கிறார்கள். 'கிரௌடிங்' என்று பி.டபிள்யூ.டி-யில் ஆங்கிலத்தில் சொல்லுவார்கள். சாதாரணமாக அணை முதலானவைகள் கட்டும் பொழுது அஸ்திவாரம் போடும்பொழுது பாறையைச் சுற்றி கெட்டியாக இருக்கின்ற அளவிலே ஒரு துளை போட்டு அதிலே பொறைகள் இருந்தால் சிமெண்டை கரைத்து அதிகமான பிரெஷர் வைத்து எங்கெல்லாம் செல்லுமோ அங்கெல்லாம் போகுமாறு அதிலே வேலை செய்து உள்ளே செலுத்துவார்கள். அந்த அளவுக்கு ஆழமாக ஜாதி வெறி, இனவெறி இந்த நாட்டிலே வளர ஒரு சாரார் வேலை செய்துகொண்டிருக்கிறார்கள். ஒரு சாரார் அகில உலக தேசியவாதிகள். அவர்களுக்கு இந்தியாவே போதாது. அவர்களோ எங்கு சண்டை கிடைக்கும், சந்து கிடைக்குமோ என்று பார்ப்பவர்கள். தங்களுடைய கட்சிக் கொள்கையில் வெற்றி பெறுதவர்கள், மற்றவர்கள் வண்டியிலே ஏறிக்கொண்டே எப்படியோ போகவேண்டிய இடத்தை அடைந்து விடலாம் என்று பார்க்கிறவர்கள். சமீபத்தில் பிரஜா சோஷலிஸ்டு கட்சியிடம் இந்த வேலையை ஆரம்பித்தார்கள். அவர்கள் அதை ஆரம்பித்தார்களோ அல்லது வேஷம் போட்டார்களோ ? அதிலே இன்னொரு சாரார் அவர்களுடைய கைவரிசையைக் காட்டினார்கள். சுதந்திர கட்சி போன்று புதிய கட்சிகள் மூலம் தங்களுடைய காரியங்களை சாதிக்க முடியுமா என்று பார்க்கிறார்கள். இம்மாதிரி நிலையிலே ஜாதி வெறி, இன வெறியில் இறங்குவது உண்மையிலே தெரியாமல் செய்தால் பரவாயில்லை. அதைத் தெரிந்தே செய்வார்களேயானால் அதைவிட தமிழ் நாட்டிற்குச் செய்யவேண்டிய புண்ணிய கைங்கரியம் என்ன இருக்கும்? எந்த வள்ளுவர் சொன்னார் ? எங்கிருந்து இது வந்தது ? நம்மால் புரிந்து கொள்ள முடியவில்லை. அதற்கு மேலே அரசியல் முறைக்கு போனால் கவர்னர் எங்களுக்கு வேண்டியதில்லை என்று சொல்வதை பார்க்கிறோம். அங்கிருந்து ஒரேயடியாக கீழ் மட்டத்திற்கு இறங்கி இனவெறி, ஜாதி வெறி, வடக்கத்தியான், தெற்கத்தியான் விஷயத்தில் புகுந்துவிடுகிறார்கள். கவர்னரை எங்களுக்கு பிடிக்காது, அதனால் அவர் உரையைக் கேட்க வருவதில்லை என்று சொல்லுகிறார்கள். ஆனால் பின்னாலேயே அவர்களுடைய உரையைப் பற்றி பேசுகிறபொழுது வந்து கலந்துகொண்டு விவாதத்தில் பங்கு கொள்ளுகிறார்கள். இது எப்படி இருக்கிறது என்றால், பெண்டாட்டி பிடிக்காது, ஆனால் அவள் செய்த கொழம்பு, ரசம் இவைகள் நன்றாக இருக்கின்றன, அல்லது சாம்பாரில் உப்பு இல்லை, ஹல்வாவில் நெய் இல்லை இன்னும் கொஞ்சம் கொண்டுவா சாப்பிட்டு பார்த்து சொல்கிறேன் என்று சொல்லி சாப்பிடுவது போல் இருக்கிறது. கவர்னர் உரையின்மீது விவாதத்தில் கலந்து கொண்டு அந்த பிளாக் வேண்டும், இந்த ரோடு, கிணறு வேண்டும் என்று கேட்கிறார்கள். இம்மாதிரி தமிழர், திராவிடர், ஆரியர் என்று இருந்திருப்பார்களா என்று ஒன்றுமே என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. தமிழர் யார், திராவிடர் யார், ஆரியர் யார் என்று நிர்ணயம் செய்து கூற இங்கு யார் இருக்கிறார்கள், எப்பொழுது பேசப்போகிறார்கள் என்பதையும் நான் புரிந்துகொள்ள முடியவில்லை.

[Sri S. Nagaraja Monigar] [9th August 1960

உறுதி மொழி இங்கு எடுத்துக்கொண்டார்கள். இத்தகைய நிலைமையிலே கவர்னர் பெருமான் அவர்கள் வடக்கிலிருந்து இங்கு வந்தாலும், அது காரணமில்லை, வடக்கத்தியார் என்ற முறையில் ஜாதி பேதமில்லை, கவர்னர் என்ற ஸ்தானம் இருக்கவேண்டியதில்லை என்று சொல்லுவார்கள். இத்தகைய நடவடிக்கைகளை எல்லாம் அவர்கள் பொறுத்துக்கொண்டு பணியாற்றுகிறார்கள். சுயராஜ்யம் வாங்கிய பழுத்த பெரிய பிரமுகர்களில் அவர்களும் ஒருவர். அஸாம் மாகாணத்திற்கு வேண்டி மாத்திரம் அவர் தியாகம் செய்ய வில்லை. தமிழ் நாட்டிற்கு சுதந்திரம் வேண்டுமென்று மாத்திரம் தமிழர்கள் தியாகம் செய்யவில்லை. ஒரு நாடு பூராவிற்கும் சுதந்திரம் வேண்டுமென்று தியாகம் செய்தார்கள். எந்த இராஜ்யமாவது தங்களுக்கு மாத்திரம் சுதந்திரம் வேண்டுமென்று தியாகம் செய்திருந்தால் நாட்டிற்கு சுதந்திரமே கிட்டியிருக்காது. அன்றைக்கு எல்லோரும் ஏகோபித்து வாங்கிய சுயராஜ்யம் இது. இன்று எதிர்ப்பு அவர்களுடைய பேசுகின்ற குழந்தைகளை உள்ளே புகுத்தி அவர்களுக்கு வோட்டு வாங்கிக்கொடுத்து அவர்கள் பெண்டாட்டி பிள்ளைகளுக்கு ஓட்டு வாங்கிக் கொடுத்து இங்கே வாழ வைத்திருக்கிறார்கள். அவர்கள் மிகவும் பொறுமை யோடு உரை ஆற்றியிருப்பதற்கு மேலும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறோம். தமிழர், திராவிடர் என்ற சொற்கள் இந்த நாட்டிலே சுற்றி சுற்றி வருகின்றன. 'மரத்தை மறைத்தது மாமத யானை, மரத்தில் மறைந்தது மாமத யானை' என்று சொல்லுவது போல் இருக்கிறது. தமிழர் என்று சொல்லுவது அவசியம் இல்லாதபோது அதை திராவிடர் என்று எடுத்துக் கொள்ளுகிறது. திராவிடர் வேண்டாமென்றால் தமிழர் என்று எடுத்துக்கொள்ளுகிறது. ஒன்றிலும் நம்பிக்கை இருப்பதாக நிச்சயமாக தெரியவில்லை. அதைப்பற்றி ஆதாரங்கள் சொல்லு வதற்கு இங்கு நேரம் போதாது. தமிழர்கள், திராவிடர்கள் என்பது சைனு பஜார், மவுண்டு ரோடுகளில் படம் விற்பார்கள். ஒரு பக்கம் பார்த்தால் லக்ஷ்மி தெரியும், மறு பக்கம் பார்த்தால் சரஸ்வதி தெரியும். அதை கிராமப்புறத்திலிருந்து வருபவர்கள் பார்த்தால் ஆச்சரியப்படுவார்கள். தமிழர்கள், திராவிடர்கள் என்று கலந்து பேசுவதெல்லாம் இப்படி ஏமாற்றுகின்ற வித்தை, கண்ணுடி செப்பிடு வித்தை. பிறர் ஆள்கிறார்களே என்று வயிற்று எரிச்சல். வேறு வழியில்லாமல் எப்படியாவது சர்க்காரில் புகுந்து கொள்ள முடியுமா என்று பார்க்கிறார்கள். ஒற்றுமையாக உள்ள நாட்டை துண்டாட வழி செய்தால் வாழ முடியாமலே போய்விடுவார்கள். குமரி முதல் இமயம்வரை கொடி நாட்டி னார்கள் என்று சொல்லக்கூடியவர்கள், 'நன்றி மறப்பது நன்றன்று' என்று இருப்பதை 'நன்றி மறப்பது நன்று என்று' என்பதாக அதை திருத்தவேண்டிய பாணியில் இருக்கின்றார்கள். அவர்களை மன்றாடிக் கேட்டுக்கொள்ளுகிறேன், ஒற்றுமையிலிருந்து பிறழாமல் அல்லவா இருக்கவேண்டும். தன்னைச் சுரண்டுகிறார்கள் என்று சொல்லி பிறரை கன்னத்தில் திருப்பி அடிப்பது என்பது தமிழ் நாட்டுப் பண்பு ஆகாது. சுரண்டப்படமாட்டோம், சுரண்டப் படக்கூடிய அளவுக்கு நாம் பேடிகள் அல்ல என்பதையும் மறந்துவிடக்கூடாது. மொழி சம்பந்தமான வெற்றிக்கு நாங்கள்

9th August 1960] [Sri S. Nagaraja Monigar]

தான் காரணம் என்று சிலர் சொல்லுகிறார்கள். கம்யூனிஸ்டு அவர்கள்தான் காரணம் என்று சொல்லுகிறார்கள். வி. ஆர் அவர்கள்—அவருக்கு வயது ஆகிவிட்டது.

(Expunged as ordered by the Chair.)

போக மேலும், கவர்னர் அவர்கள் உரையிலே பல விஷயங்களைப் பற்றி சொல்லியிருக்கிறார்கள். ஆனால் நான் ஒன்று சொல்லுவேன். காந்திய முறை சிக்கன வாழ்வை கடைப்பிடிக்கவேண்டும். நீர்ப் பாசனம் போன்ற திட்டங்களைத்தவிர, பெரிய கட்டிடச் செலவுகளை சர்க்காரே குறைத்து, சினிமா முதலான வகையிலே பணம் அதிக மாக செலவழிப்பதை நாமும் நிறுத்தி, எளியோர் பலனடையும் படியான திட்டங்களை மேற்கொள்ளவேண்டும். 'ஸ்மால் ஸ்கேல் சேவிங்ஸை' சர்க்கார் துரிதப்படுத்த ஆவன செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். சுயராஜ்யம் வாங்கிக்கொடுத்த பிறகு, நாட்டு மக்கள் ஒற்றுமையோடு இருந்து ஒன்றாக வாழ் வதற்கு நண்பர்கள் ஒத்துழைக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டு, எனது உரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

Sri M. P. SARATHI : சட்ட மன்ற உதவித் தலைவர் அவர்களே, கவர்னர் பெருமான் உரையின் மீது, என்னுடைய கருத்துக்களைச் சொல்ல ஆசைப்படுகிறேன். கவர்னர் உரையில் மத்திய அரசாங்க ஊழியர்களின் வேலை நிறுத்தத்தால் சமீபத்தில் தோன்றிய நெருக் கடி நாட்டுக்குப் பெரும் கெடுதி எதையும் விளைவிக்காமல் சுமுக மாக முடிவடைந்ததைப் பற்றியும் தன்னுடைய பெருமையையும் சந்தோஷத்தையும் அடைந்து தன் உரையை ஆரம்பித்திருக் கிறார்கள். அதே உரையில் விலைவாசி ஏறிவிட்டது. அதை நம்மால் கட்டுப்படுத்த முடியாது. ஆகையினால், மத்திய சர்க்காருக்கு யோசனை சொல்லியிருக்கிறோம் என்றார்கள். இந்த மத்திய சர்க் கார் ஊழியர்களின் யூனியன்கள் சர்க்கார் விதிப்படி ஏற்பட்டவை; இந்த யூனியன்களை சர்க்கார் அங்கீகாரம் செய்திருக்கிறது. அப்படி இருந்தும், அவர்கள் விதிப்படி செய்யும் வேலை நிறுத்தத்தை அடக்கி விட்டு, அது சுமுகமாக முடிவடைந்தது என்று பெருமை யோடு சொல்லிக்கொள்ளக் கூடிய காரியமா அது? அதுவும் ஒரு அரசாங்கத்திற்கு, அதிலும் ஜனநாயக அரசாங்கத்திற்கு பொருந் துமா? என்று கேட்க விரும்புகிறேன். அது சர்வாதிகார ஆட்சிக்கு உகந்ததாக இருக்குமே தவிர, ஒரு ஜனநாயக ஆட்சிக்கு உகந்த தில்லை. சர்க்காரே அங்கீகரித்த யூனியன் செய்யும் காரியத்தை ஒரு அவசரச் சட்டம் போட்டு, ஊழியர்கள் ஸ்ட்ரைக் செய்யக் கூடாது என்றும், செய்தால் அபராதமும், வேலையை விட்டு நீக்கப் படுவார்கள் என்றும் ஷரத்துக்களைப் போட்டு உருவாக்கி, சர்க்கார் ஊழியர்கள் பேரில் பழி வாங்குவது பற்றி சந்தோஷப்பட ஒரு சர்க்காருக்கு என்ன நிலை இருக்கிறது? நான் வட ஆற்காடு மாவட்டத்தைப் பற்றிச் சொல்லுகிறேன். அந்த வேலை நிறுத் தத்தை போலீசாரே அடக்கி விட்டார்கள் என்று நினைக்க வில்லை. மூன்றாந்தர, நான்காம்தர காங்கிரஸ்காரர்கள், சர்க்காரில், நாங்கள் வேலை செய்கிறோம் என்று சொல்லி, வீடுவீடாக, தபால் கடிதங்களை பட்டுவாடா செய்தார்கள். அவர்கள் ரொம்பக் கீழ்த் தரமாக நடந்திருக்கிறார்கள். எனக்கு வரும் தபாலை ஒரு

[Sri M. P. Sarathi] [9th August 1960

காங்கிரஸ்காரர் பிரித்து பார்க்காமல் என்னிடம் கொடுப்பாரா? அவ்வளவு கீழ்த்தரமான முறையிலே ஒரு சர்க்கார் போய்க் கொண்டிருந்தால், எந்த விதத்தில் நல்ல முறையில் காரியங்கள் நடைபெறும்? ஒரு ஸ்ட்ரைக் செய்த ஊழியரின் வீட்டில் இரவில் 2 மணி, 3 மணிக்கு சென்று, கதவைத் தட்டி, எங்கே என்று கேட்டார்கள். இல்லை என்றதும், அவரை ஜாக்கிரதையாக இருக்கச் சொல்லுங்கள், என்று பயமுறுத்தி, தாய் தந்தையரை போலீசாருடன் சென்று காங்கிரஸ்காரர்கள் பெரிய மனிதன் என்பவர்கள், ஊழியரின் மனைவி, தாய், தந்தையரை அச்சுறுத்தி இருக்கிறார்கள். இதுதானா உங்கள் ஆட்சி, இதற்காகவா ஒரு கவர்னர் சந்தோஷப்படுகிறது என்று கேட்கிறேன்.

ஆட்சி சம்பந்தமாக, 1959-ம் ஆண்டிலேயே, நமது பிரதம மந்திரி இந்திய மொழி கொள்கைபற்றிப் பேசிய பேச்சும், அரசியல் அமைப்பின் 344-வது பிரிவின்படி ஜனாதிபதி மேற்படி கொள்கை அடிப்படையில் வெளியிட்ட உத்தரவும் மொழி பற்றி தொல்லை தரும் பிரச்சினைக்கு முடிவு கண்டுள்ளன, என்று கூறியிருக்கிறார்கள். இன்றைக்கு முடிந்து விட்டதா? கவர்னர், எப்படி முடிந்துவிட்டது, அதுதான் முடிவு, என்று கூறுகிறார்? 1965-க்குப் பிறகு தான் ஹிந்தி வரும் என்றால், இப்பொழுதே ஏன் ஒவ்வொரு கடிதத்திலும், போஸ்ட் ஆபீசிலும், ரெயில்வேயிலும், கார்டு, கவர் போன்றவைகளிலும் ஹிந்தியிலே தானே இருக்கிறது. அமைச்சர் பெருமையாகச் சொல்கிறார்கள் தமிழைக் காப்பாற்றுவதில், மற்றவர்களை விட நாங்கள் குறைந்தவர்கள் இல்லையென்று. அவர்கள் ஒரு கடிதத்திலாவது, தமிழைப் போடக்கூடிய ஒரு நிலையைச் செய்திருக்கிறார்களா? ஏன்? அந்த மனப்பான்மை வரவில்லை. எஜமானன் கோபிப் பார்களே என்று அவர்களுக்கு இவர்கள் தாளம் போட்டுக் கொண்டிருக்கிறார்கள். இவர்கள் பாவம் என்ன செய்வார்கள். சிறு குழந்தைகள் உடல் பயிற்சிக்காக எ.சி.சி., என்.சி.சி. போன்றவைகளில் ஹிந்தியில்தான் "பேரேடு" சொல்கிறார்கள். அது 1965-ல் வந்தால் வந்து தொலைந்து போகட்டுமே. இப்பொழுதே ஏன் இந்தத் தொல்லை என்று கேட்கிறேன். அப்போது பார்த்துக்கொள்ளலாம்.

விலைவாசி உயர்வு பற்றி கவர்னர் உரையில் இதற்கு என்ன காரணம் என்றும், நம்மால் கையால் ஆகாது, மத்திய சர்க்காருக்கு யோசனை சொல்லியிருக்கிறோம் என்கிறார்கள். முதலீடு செய்யும் விகிதம், தொழில் கொள்கை, இறக்குமதிக் கட்டுப்பாடுகள், கலால் தீர்வைகள், கடன் நிபந்தனைகள் முதலிய அம்சங்கள் தான் விலைவாசி ஏற்றத்திற்குக் காரணம் என்கிறார்கள். இந்த சின்ன சர்க்கார், அந்தப் பெரிய சர்க்காருக்கு யோசனை சொல்கிறது. ராஜாஜி நோட்டு அடிப்பதைப் பற்றி சொன்னார்கள். இதுவும் ஓர் யோசனை. இந்த சர்க்கார் அந்த சர்க்காருக்கு யோசனை சொல்கிறது. அந்த அளவில்தான் நம் சர்க்கார் யோசனை சொல்ல முடியுமே தவிர, நாம் தீவிரமாக இன்னதுதான் செய்ய வேண்டுமென்று கட்டுப்படுத்த முடியாது.

9th August 1960] [Sri M. P. Sarathi]

தொழிற்சாலைகள் ஏற்படுத்துவது பற்றிப் பேசவேண்டுமானால், ஒவ்வொரு பட்ஜெட்டிலும், நெய்வேலியைப் பற்றி குறிப்பிடு கிறோம். இந்த உரையில் அலுமினியம் தொழிற்சாலை இத்தாலிய உதவியுடனும், பிரஞ்சுக்காரர்கள் உதவியில் கச்சா பிலிம் தொழிற்சாலையும், ரஷ்ய உதவியுடன் அறுவைக்கருவிகள் தொழிற் சாலையும் நிறுவுவதாகச் சொல்லியிருக்கிறார்கள். இதெல்லாம் வெளிநாட்டாரின் உதவிகொண்டு செய்வதாக இருக்கிறது. ஒரு வெளிநாட்டானை வைத்துக் கொண்டே அவதிப்பட்டுவிட்டு, அவனைத் துரத்திவிட்டு, இப்பொழுது பலவெளி நாட்டார்களின் பிடியில் அகப்பட்டுக் கொள்வது உகந்த விஷயமா? மத்திய சர்க் காருடைய உதவியில் என்னென்ன செய்யப் போகிறார்கள் என்று சொல்லி பெருமை அடித்துக் கொள்ள என்ன இருக்கிறது? தூத்துக் குடி துறைமுக சம்மந்தமாக அன்று முதல் அமைச்சரவர்கள் அது கண்டிப்பாக மூன்றாவது திட்டத்தில் சேர்க்கப் படும் என்று சொன்னார்கள். நாங்களும் சந்தோஷப்பட்டோம். ஆனால், மறு நாளே, மத்திய சர்க்கார் உதவி மந்திரியொருவர், பணமில்லை, எடுப்பது சந்தேகம் என்று சொல்கிறார். இதை இன்று பத்திரி கையில் பார்க்கிறோம். ஆகவே, நாம் சொல்லி கண்டிப்பாகச் செய்யச் சொல்ல என்ன இருக்கிறது? நாம் ஒன்றும் அநியாய மாகச் சொல்லவில்லை. நியாயமான முறையிலே, நம் தேவையைக் கண்டிப்பாகச் செய்யவேண்டும் என்று சொல்லக்கூடிய சூழ்நிலை ஏற்படவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

மூன்றாவது திட்டத்திற்கு, கவர்னர் சர்வ கட்சித் தலைவர்கள் கூடி அதன் மூலமாக என்னென்ன வேண்டுமென்று யோசனை கூறுங்கள் என்று சொல்லி முடித்திருக்கிறார்கள். இங்கே எங்கள் அண்ணா ரூபாய் 1,000 கோடிக்குத் திட்டம் சொன்னால், நிதியமைச் சரவர்கள், வெளியில் சென்று பண்டாரம் கதை சொல்ல ஆரம் பித்து விட்டார்கள். இப்படிப் பெரிய பண்டாரம், சின்ன பண்டாரம் கதை சொல்ல ஆரம்பித்தால், திட்டம் எப்படி உருப் படும்? அதைப் பார்த்தால் ரொம்ப வேதனையாக இருக்கிறது.

அடுத்தபடியாக மின்சாரத்தைப் பற்றிச் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இங்கே மின்சார அமைச்சரவர்களும் இருக்கிறார்.

வேலூருக்கு அடுத்தாற்போல் ஒன்றிரண்டு மைல்களில் ஊசூர், அரியூர், பூதூர், அத்தியூர் போன்ற கிராமங்கள் இருக்கின்றன. அவைகளுக்கு இன்னும் மின்சாரம் வழங்கப்படவில்லை. ஆனால் பக்கத்திலுள்ள டவுன்களுக்கு மின்சாரம் வழங்கப்பட்டிருக்கிறது. கவர்னர் அவர்கள் உரையில் அநேகம் கிராமங்களுக்கு மின்சாரம் சப்ளை செய்யப்பட்டிருப்பதாகச் சொல்லியிருக்கிறார். ஆகவே இந்த கிராமங்களுக்கும் மின்சாரம் சப்ளை செய்வதற்கு நட வடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்ளு கிறேன். பக்கத்திலுள்ள டவுனுக்கு மின்சாரம் வரும்போது இந்த கிராமங்களுக்கு மின்சாரம் சப்ளை செய்யாமல் இருப்பதற்குக் காரணம் என்ன என்பது தெரியவில்லை. அங்கு தனிப்பட்ட கம்பெனி இருப்பதுதான் காரணமோ என்னமோ தெரியவில்லை. அங்கு சந்திரி கம்பெனி என்ற தனிப்பட்ட கம்பெனி ஒன்று மின்

சாரம் சப்ளை செய்து வருகிறது. அவர்களைக் கேட்டால் தங்களிடம் பணம் இல்லை என்று அவர்கள் சொல்லுகிறார்கள். ஆகவே அவர்களுக்கு கடன் வழங்கியாவது உடனடியாக அந்த கிராமங்களுக்கு மின்சாரம் சப்ளை செய்யச்சொல்ல ஏற்பாடு செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். இத்துடன் என் பேச்சை முடித்துக்கொள்ளுகிறேன்.

SRI V. SANKARAN : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கவர்னர் பெருமான் நிகழ்த்திய உரைக்கு நன்றி தெரிவிக்கும் முறையில் ஒரு சில வார்த்தைகளைச் சொல்ல விரும்புகிறேன். கவர்னர் உரையில், தமிழ் நாட்டில் இன்றைய நிலை என்ன, என்னென்ன தொழிற்சாலைகள் ஆரம்பிக்கப்பட்டிருக்கின்றன, என்னென்ன தொழிற்சாலைகள் ஆரம்பிக்க இருக்கின்றன, என்னென்ன வேலைகள் நிறைவேற்றப்பட்டிருக்கின்றன, என்னென்ன திட்டங்கள் நடந்து கொண்டிருக்கின்றன என்பதைப் பற்றியெல்லாம் விவரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ராஜ்யத்தில் சாதித்திருக்கக்கூடிய வேலைகள் அவ்வளவையும் சொல்லாவிட்டாலும் குறிப்பாக சுருக்கமாக என்னென்ன நடைபெற்று இருக்கின்றன என்பதைப் பற்றி சொல்லப்பட்டிருக்கிறது. என்னென்ன திட்டங்கள் நடந்துகொண்டிருக்கின்றன என்னென்ன
1–00 p.m. திட்டங்கள் ஆரம்பிக்கப்பட்டிருக்கின்றன என்பதைப்பற்றியெல்லாம் சுருக்கமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. கல்வி, மின்சாரம், இன்னும் மற்றவைகளில் இந்த மாநிலம் மற்ற மாநிலத்தைக் காட்டிலும் எவ்வளவு தூரம் முன்னேற்றமடைந்திருக்கிறது, எவ்வளவு வேலைகளைச் செய்திருக்கிறது என்றெல்லாம் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த மாநிலம் சரியான நிலையில் இருந்து கொண்டிருக்கிறது என்பதைப்பற்றியெல்லாம் விவரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. என்னென்ன தொழில்கள் ஆரம்பிக்கப்படும் என்றும் என்னென்ன தொழில்களை ஆரம்பித்தால் வாழ்க்கைத்தரம் உயரும் என்றும் அதற்குத்தக்கபடி தொழிற்சாலைகளை ஆரம்பிப்பதற்கு திட்டமிட்டிருப்பதையும் அவர் சொல்லியிருக்கிறார். அத்துடன் பருவ மழை சரியாக இல்லை என்பதைப் பற்றியும் குறிப்பிட்டிருக்கிறார். இது சம்பந்தமாக நாம் ஒன்றை மனதில் வைத்துக்கொள்ளவேண்டும். உணவு பொருள்களின் விலை இப்பொழுது அதிகமாகிக்கொண்டே இருக்கிறது. அது பொது மக்கள் வாங்கக் கூடிய அளவில் விற்கப்படவேண்டும். நாம் எவ்வளவு திட்டங்களைப் போட்டாலும் அவற்றை நிறைவேற்றுவதற்கு எவ்வளவு கோடி ரூபாய் செலவு செய்தாலும் மக்களுக்குக் கிடைக்கக்கூடிய உணவுப் பொருள்களின் விலை குறைவாக விற்றால் தான் நாம் போடக்கூடிய திட்டம் அவர்கள் அனுபவிக்கக்கூடிய நிலைமையில் நிறைவேற முடியும். ஆகவே பொது மக்கள் வாங்கக் கூடிய உணவுப் பொருள்களுடைய விலையைக் குறைக்க தக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும். இல்லாவிட்டால் நாம் செய்து வரும் அபிவிருத்தி வேலைகளை மக்கள் உணர முடியாது. அப்படி உணருவதற்கு வாய்ப்பு இல்லாமல் போய்விடும். இன்றைக்கு நாம் எவ்வளவு திட்டம் போட்டாலும் உணவுப் பொருள்களின் விலை குறையாவிட்டால் அந்த திட்டங்கள் எல்லாம் மக்களுடைய கண்ணில் படாது. ஆகவே பாமர மக்கள் சாதாரண ஏழை மக்கள் வாங்கக்கூடிய விலை அளவில் உணவு பொருள்கள்

9th August 1960] [Sri V. Sankaran]

கிடைப்பதற்கு வழி செய்யவேண்டும். அதற்கு வேண்டி எந்த வகையாவது கையாள வேண்டும். சப்சிடி கொடுத்தாவது அல்லது இறக்குமதி செய்தாவது அல்லது வேறு எந்த வழியைக் கைப் பிடித்தாவது ஓரளவு உணவுப் பொருள்களின் விலையைக் குறைக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும். பல வழிகளில் அதைக் குறைப்பதற்கு வழி காண வேண்டியது அரசாங்கத்தினுடைய கடமையாக இருக்கவேண்டும். இப்பொழுதே பருவ மழை தவறி விட்டதாகச் சொல்லப்படுகிறது. ஆகவே இப்பொழுது முதற் கொண்டே அதற்கு வேண்டிய நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும். இல்லா விட்டால் சென்ற வருஷம் பின்னால் கஷ்டப் பட்டது போன்ற நிலைமை ஏற்படும். இதற்கு இடம் கொடுக்காமல் இப்பொழுதிருந்தே அதற்கு வேண்டிய நடவடிக்கை எடுத்துக் கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

எனக்கு முன்னால் பேசிய கம்யூனிஸ்ட் அங்கத்தினர் ஒருவர் பேசும்போது கள்ள நோட்டு அச்சடிப்பதைப்பற்றி சொன்னார். அதாவது காங்கிரஸ் கட்சிக்குச் சார்பாக உள்ளவர்கள் கள்ள நோட்டு அச்சடிக்கிறார்கள் என்று குறிப்பிட்டார். எங்கள் ஊரில் ஒரு வதந்தி உலவியது. அதைப்பற்றி இந்தச் சந்தர்ப்பத்தில் கூற விரும்புகிறேன். அது ஒரு வதந்திதான். கள்ள நோட்டு அச் சடிப்பது ஆரம்பம் ஆனது கேரளாவில்தான் முதலில் ஆரம்பம் ஆயிற்று என்றும், அங்குதான் இந்தத் தொழிலை முதலில் ஆரம்பித் தார்கள் என்றும், இந்தியாவின் ஜெனரல் எகானமியை பாழாக்க வேண்டும் என்ற எண்ணத்தில் அங்கு அதிகப்படியாக கோடிக் கணக்கான கள்ள நோட்டுகள் அச்சடிக்க ஏற்பாடு செய்யப்பட்டு அதை இந்தியா பூராவிலும் புழக்கத்தில் இருப்பதற்கு அனுப்பப் பட்டதாக ஒரு வதந்தி இருந்தது. அப்பொழுதுதான் ஓரளவு நம் ராஜ்யத்திலிருந்து அந்த ராஜ்யம் இங்கிருந்து வாங்கப்பட்ட அரிசிக்கு அதிகப்படியான பணம் கொடுத்துக்கூட வாங்கினார்கள் என்றும் சொல்லப்பட்டது. மூட்டைக்கு சாதாரண விலைக்கு மேல் ஐந்து அல்லது பத்து ரூபாய் அதிகமாகக் கொடுத்து வாங்கி அந்த விதத்தில் அந்தக் கள்ள நோட்டுகளை வெளியில் புழக்கத்தில் விட்டார்கள் என்றும் சொல்லப்படுகிறது. ஆனால் அந்த வதந்தி உண்மையாக இருக்கும் என்று நான் சொல்லவில்லை.

அடுத்தபடியாக கவர்னர் உரையைப் பார்க்கும் போது "முழு நிதி உதவி அளிக்கும் திட்டம்" ஒன்றை தஞ்சையில் ஆரம்பித் திருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அதை தஞ்சை ஜில்லாவில் சில ப்ளாக்குகளில் ஆரம்பிக்கப் போவதாகச் சொன்னார்கள். அதைப்போலவே எல்லா ஜில்லாக்களிலும் ஆரம்பிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். எல்லா ஜில்லாக்களிலும் எல்லா ப்ளாக்குகளிலும் அதை ஆரம்பிக்க வேண்டும் என்றும் கேட்டுக் கொள்ளுகிறேன். அப்படி ஆரம்பித்தால் எல்லா விவசாயிகளுக்கு ரொம்பவும் உதவியாக இருக்கும். கிராமங்களில் விவசாயிகள் கடன் வாங்கி படும் கஷ்டத்தைப் பார்த்தால் ரொம்பவும் பரிதாபகரமாக இருக்கிறது. அவர்கள் கொடுக்கக்கூடிய வட்டியை கணக்கிட்டுப் பார்த்தால் ஏராளமாக இருக்கும் 100-க்கு 40 வட்டி என்று கூட கணக்கு ஆகிறது. அப்படிப்பட்ட இந்தத் திட்டத்தை எல்லா ப்ளாக்குகளிலும் ஆரம்பித்தால் விவசாயிகளுக்கு எவ்வளவோ

[Sri V. Sankaran] [9th August 1960

நன்மையாக இருக்கும். ஆகவே இந்தத் திட்டத்தை எல்லா ஜில்லாக்களிலும் எல்லா ப்ளாக்குகளிலும் பரப்பவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

கல்வி சம்பந்தமாக pay commission ரிப்போர்ட்டைப் பார்த்தால் அங்கே ஆசிரியர்களுக்குள் பாரபட்சம் இருக்கிறது. சீனியர் ஆசிரியர்களுக்கும் ஜூனியர் ஆசிரியர்களுக்கும் வசதி சலுகைகளில் வித்தியாசம் இருக்கிறது. ஜூனியர் ஆசிரியர் களுக்கு பூர்ண வசதி இருக்கிறது, அவ்வளவு வசதிகள் சீனியர் ஆசிரியர்களுக்கு இல்லை. இதைப் பார்த்துச் சரி செய்யவேண்டும். கொடுக்கப்பட்டிருக்கும் சலுகையை எல்லா ஆசிரியர்களுக்கும் விஸ்தரிக்கக்கூடிய அளவில் இருக்கவேண்டும்.

கைத்தறி சம்பந்தமாக சொல்லும்போது இன்றைக்கு நூல் விலையின் நிலைமை ரொம்பவும் மோசமாகிக்கொண்டு வருகிறது. கைத்தறி கமிட்டியில் கூட இதைப்பற்றி சொல்லப்பட்டிருக்கிறது. மோட்டா ரக நூல்களில் செய்யக்கூடிய துணிகள் எல்லாம் வெளி நாடுகளுக்கும் வட இந்தியாவுக்கும்தான் அனுப்பப்படுகிறது. ஆதலால் நைஸ் நூலில் நூற்கப் பழகிக்கொள்ளவேண்டும் என்பது சரியான யோசனையாகாது. அப்படிப்பட்ட மோட்டா ரக நூல் களுடைய விலை ஒரேயடியாக உயர்ந்திருக்கிறது. அதைக் குறைப் பதற்கு வழிவகை காணவேண்டும். இல்லாவிட்டால் நெசவாளர்கள் கஷ்டப்படக்கூடிய நிலைமை ஏற்படும். கைத்தறித் தொழில் நசுக்கப்படக்கூடிய நிலைமை ஏற்படலாம். ஆகவே நூல் விலையை கணிசமாகக் குறைக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அப்படி குறைத்து நெசவாளர்களுக்கு நூல் மலிவாக வசதியான முறையில் கிடைக் கும்படியாகச் செய்யவேண்டும். அப்பொழுதுதான் கைத்தறித் தொழிலை நாம் காப்பாற்ற முடியும்.

அடுத்தபடியாக சர்க்கரை சம்பந்தமாக சொல்ல வேண்டும். நமது ராஜ்யத்திற்கு உள்ள கோட்டா பத்தாயிரம் டன் என்று சொல்லப்படுகிறது. அது ரொம்பவும் குறைவானது. நமக்கு குறைந்த பட்சம் பதினைந்து ஆயிரம் டன்னாவது கோட்டா இருக்க வேண்டும். அதற்கு வேண்டிய ஏற்பாட்டைச் செய்ய வற்புறுத் தியாக வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக ஆங்கில விஷயம். ஏற்கெனவே வகுப்புகளில் ஸ்டாண்டர்ட் ரொம்பவும் குறைவாக இருக்கிறது. செகண்டரி, எலிமெண்டரி க்ளாஸ் ஆசிரியர்களுக்கு வேண்டிய ஆங்கில பயிற்சி இல்லாமல் இருப்பதால் அவர்களைக் கொண்டு ஆங்கிலம் சொல்லிக் கொடுக்க வேண்டுமானால் ஸ்டாண்டர்ட் ரொம்பவும் குறைந்து போய்விடும். மாணவர்களுடைய ஸ்டாண்டர்ட் நல்லபடியாக இருக்கவேண்டுமானால் ஆசிரியர்களுடைய தரமும் நன்றாக இருக்கவேண்டும். அதற்குத் தகுந்தாற்போல் ஆசிரியர்களுக்கு வேண்டிய பயிற்சி கொடுக்கப்பட வேண்டும். ஆகவே ஆங்கிலத் தில் சொல்லிக்கொடுக்க போதிய பயிற்சியை அடிக்கடி Refresher Courses மூலம் ஆசிரியர்களுக்குக் கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அப்பொழுது தான் மாணவர்களுடைய ஸ்டாண்டர்டும் நல்ல முறையில் இருக்கும்.

9th August 1960] [Sri V. Sankaran]

அடுத்தபடியாக சேரி ஒழிப்பு சம்பந்தமாக சொல்லும்போது, அதைப்பற்றியும் கவர்னர் உரையில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. சேரி ஒழிப்பைப்பற்றி பல வருஷங்களாக சொல்லிக்கொண்டு வந்திருந்தபோதிலும் மதுரை போன்ற நகரங்களில் இன்னும் தொடக்கூடப்படவில்லை. அவைகள் எல்லாம் திட்டம் அளவில் இருக்கிறதேயொழிய உண்மையில் சேரிகளை புனரமைக்க எந்த விதமான நடவடிக்கையும் எடுத்துக்கொண்டதாகத் தெரியவில்லை. குறிப்பாக வைத்தியநாதபுரம் என்ற இடத்தில் அதை அமுலுக்குக் கொண்டு வரவேண்டும் என்று ஐந்தாறு வருஷங்களாகச் சொல்லிக் கொண்டு வந்தும் இது வரையிலும் எந்த விதமான நடவடிக்கையும் எடுத்துக்கொண்டதாகத் தெரியவில்லை.

அடுத்தபடியாக விற்பனை வரி சம்பந்தமாக, சில வார்த்தைகளைச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். சில பொருள்களை விற்பனை வரியிலிருந்து விலக்கவேண்டும் என்று சொல்லிக்கொண்டு வந்தும் இன்னும் நடவடிக்கை எடுத்துக்கொள்ளவில்லை. அவைகளுக்குப் போடப்படும் விற்பனை வரியை எடுத்து விட்டால் எவ்வளவோ நலமாக இருக்கும். மக்களுக்கு நல்ல சமிக்ஞை (gesture) ஆக இருக்கும். அதிகப்படியாக தேவையாக உள்ள இரண்டொரு பொருள்களுக்கு விற்பனை வரியிலிருந்து விலக்கு அளிக்க வேண்டும். அவைகளில் முக்கியமானது பால், நெல். கண்டிப்பாக இவைகளுக்கு விற்பனை வரி கூடாது. சீக்கிரத்தில் அதற்கு வழிவகை செய்ய வேண்டும். அதைப் போலவே நெய்க்கும் விலக்கு அளிக்க வேண்டும். அதற்கு வேண்டிய நடவடிக்கையை இந்த வருஷம் முதற்கொண்டே எடுத்துக்கொண்டால்தான் அடுத்த வருஷத்திலாவது அமுலுக்குக் கொண்டு வருவதற்கு ஏதுவாக இருக்கும். ஆகவே இவைகளுக்கு விற்பனை வரியிலிருந்து விலக்கு அளிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

உரம் சம்மந்தமாக கூட்டுறவு சொஸைடி மூலம் விநியோகிக்க ஏற்பாடு செய்யப்பட்டபோதிலும்கூட போதிய அளவு, குறிப்பிட்ட காலத்தில் கிடைக்கவில்லை என்ற குறைபாடு எல்லா இடங்களிலும் இருந்து கொண்டிருக்கிறது. உழவு காலத்தில், நடவு காலத்தில் உரம் போதுமான அளவுக்குக் கிடைக்கும்படியாக வழிவகை செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்ள விரும்புகிறேன்.

ஸ்காலர்ஷிப் சம்பந்தமாகவும் ஒரு குறைபாடு இருந்து கொண்டிருக்கிறது. உதவி கொடுக்கும்படியாக நிலைமையில் அவ்வப்போது சீக்கிரத்தில் அதைக் கொடுத்தால்தான் நன்றாக இருக்கும். முன்னால் கட்டி, பின்னால் வாங்குவது என்றால் எல்லோராலும் முடியாது. காரணம் பல குடும்பங்கள் இன்றையதினம் மிகவும் கஷ்டமான நிலைமையில் இருந்து கொண்டிருக்கின்றன. ஆகவே இந்த ஸ்காலர்ஷிப் தொகையை முன்கூட்டியே காலத்தில் கொடுத்துதவவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

கடைசியாக வில்லேஜ் ஆபீசர்கள் சம்பந்தமாக ஓரளவுக்கு நிலைமையைச் சீர்திருத்தியிருந்தாலும் கூட பே கமிஷன் மூலமாக செய்யப்பட்ட வழிவகை மூலம் அவர்களுக்குப் போதுமான நிவாரணம் அளிக்கவில்லை. பல ஆண்டுகளுக்கு முன்னால் காபினெட் சப் கமிட்டி அமைக்கப்பட்டபோதிலும்கூட ஓரளவு சிக்கல்

[Sri V. Sankaran] [9th August 1960

இருக்கிறது. அவர்களை முழுநேர ஊழியர்களாகக் கருதுவதா பார்ட்டைம் ஊழியர்களாகக் கருதுவதா என்ற பிரச்னை இருந்தது. இப்பொழுது அவர்களுடைய வேலையும் அதிகமாகி விட்டது. நிறைய ரெக்கார்டுகள் வைக்கவேண்டியிருக்கிறது. அடிக்கடி ஹெட்குவார்டர்சுக்கும் போகவேண்டியிருக்கிறது. ஆகவே அவர்களை முழு நேர ஊழியர்களைப் போலக் கருதி அவர்களுடைய நிலைமையை சீர்திருத்தவேண்டுமென்ற கோரிக்கை இருக்கிறது. ஏதோ பரம்பரை பாத்யதை போன்றவற்றையெல்லாம் சர்ச்சை செய்து கொண்டிருக்காமல் அவர்களுடைய நிலைமையைப் பரிசீலனை செய்யவேண்டும். அதுவும் அகவிலை அதிகரித்து இருக்கும்படியான நிலைமையில் ஓரளவாவது ஊதியத்தை உயர்த்தலாமா என்ற முறையில் பரிசீலனை செய்யவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

மேலும் சென்னை நகரத்தில் தனி கார்ப்பரேஷன் ஏற்படுத்தி நகர அபிவிருத்திக்கு ஏற்பாடு செய்திருப்பது போல இதர நகரங்களிலும் செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

மேலும் புதுத் தொழில்களை ஆரம்பிக்கும்போது குறிப்பிட்ட சில நகரங்களில் மட்டுமல்லாமல் எல்லா ஜில்லாக்களிலும் பரவலாக ஏற்படுத்தவேண்டும். அதுவும் பின்தங்கிய ஜில்லாக்களுக்கு முக்கியத்துவம் கொடுத்து ஏற்படுத்தவேண்டும். அப்போது தான் அங்குள்ளவர்களுக்கு வேலை கிடைக்கும் வாய்ப்பு ஏற்படும். வாழ்க்கைத்தரமும் உயரும் என்று சொல்ல விரும்புகிறேன். மேலும் நகரங்களில் அதிக நெருக்கடி இருப்பதன் காரணமாக புதுத் தொழில்கள் ஏற்படுத்துவது என்றால் நகரங்களுக்கு அப்பால் பத்துப் பதினைந்து மைல்கள் தள்ளி ஆரம்பிக்கவேண்டும். நகரங்களுக்குள்ளேயே தொழிற்சாலைகளை ஆரம்பிக்கும்போது வாழ்க்கைத்தரம் உயர்ந்துபோகிறது. இடநெருக்கடி அதிகமாகிறது. அதனால் பல கஷ்டங்கள் உண்டாகின்றன. ஆகவே நகரங்களுக்கு அப்பால் பத்துப் பதினைந்து மைல் தள்ளித்தான் புதுத் தொழிற்சாலைகளை ஏற்படுத்தவேண்டுமென்று கேட்டுக்கொண்டு முடித்துக் கொள்கிறேன்.

* Sri K. ANBAZHAGAN: சட்டமன்ற துணைத் தலைவர் அவர்களே, கவர்னர் பெருமான் ஆற்றிய உரையின் மீது என்னுடைய கருத்தைத் தெரிவிப்பதற்காக நான் நிற்கின்றேன். கவர்னர் பெருமான் நிகழ்த்திய உரையையொட்டித் தமது நன்றி அறிதலை ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்கள் தெரிவித்திருக்கிறார்கள். நன்றி அறிதல் தெரிவித்துக்கொள்வதை என்னைப்போன்றவர்கள் தவறாகக் கருதாவிட்டாலும், நன்றி அறிதல் தெரிவித்துக்கொள்வதன் மூலம் அவர் உரையை அப்படியே முழுவதும் ஆமோதிப்பது என்ற மனப்பான்மையில் கவர்னர் பெருமான் உரையில் இந்த அரசாங்கத்தார் மேற்கொண்டிருக்கிற சில திட்டங்களையும், நடைமுறைகளையும் கூறியுள்ளபோது அவற்றில் உள்ள குற்றங்குறைகள் என்ன என்பதைப் பார்க்காமலேயே ஒத்துக்கொள்வது நல்லது அல்ல என்று கருதியே, இந்த மாற்றத்தைத் தெரிவிக்க மற்ற கட்சி உறுப்பினர்கள் மறுப்பு தெரிவித்திருக்கிறார்கள். உண்மையாகவே கவர்னரின் உரையை சென்ற ஆண்டு நிகழ்ந்ததற்கும், இப்போது நிகழ்ந்ததற்கும் இடையில் எட்டு, ஒன்பது மாதங்கள் ஆகியுள்ளது.

அதை வேறு கோணத்தில் ஆளுங்கட்சியினர் குறிப்பிட்டார்கள். நான் சென்ற ஆண்டு பேசியபோது குறிப்பிட்டதாக நினைக்கிறேன். அப்போது அவர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. கவர்னர் பெருமான் உரையை பட்ஜெட் நிதிவரவு செலவுத்திட்ட உரைக்கு முன்னால் இரண்டொரு மாதங்களில் அமைப்பதில் பயன் இல்லை. நான்கு ஐந்து மாதங்கள் முன்பாக அமைத்தால்தான் அதன்பேரில் அங்கத்தினர்கள் சொல்கிற ஆலோசனைகளின் அடிப்படையில் நமது நிதி நிலை அறிக்கையைத் தயார் செய்யமுடியும். அந்த விளக்கங்களின் பேரில் உருவாக்க முடியும் என்று குறிப்பிட்டேன். அந்த முறையில் இந்த முறை உரைநிகழ்த்தப்பட்டிருக்கிறது என்று கருதுகிறேன், அமைச்சர் அவர்கள் ஏற்றுக் கொள்ளாவிட்டாலும்.

கவர்னர் அவர்கள் உரையில் மிகவும் குறிப்பாகத் தெரிவித்திருக்கவேண்டிய கருத்தாக—இலங்கையில் இன்றைய தினம் பாதிக்கப்பட்டிருக்கிற பல்லாயிரக்கணக்கான தமிழர்களுடைய பிரச்னை இருந்தும் அது பற்றி ஒன்றும் குறிப்பிடப்படாதது வருத்தந்தருவதாகும். இன்றும் தீராத தலைவேதனையாக அது இருக்கிறது. இலங்கை அரசாங்கத்திற்கு நெருக்கடி நேரிடலாம். அந்த அரசாங்கத்தில் மாறுதல்கள் ஏற்படலாம். இப்படி மாற்றம் ஏற்பட்டாலும், நெருக்கடி நேரிட்டாலும் இங்கே இருந்து அங்கே சென்று குடியேறிய தமிழர்களே வேதனைப்படவேண்டியதாக இருக்கிறது. நான் 'தமிழர்கள்' என்று சொல்லும்போது, மாற்றுக் கட்சியில் உள்ள சிலர் தமிழர்களிடத்தில் மட்டும் அக்கறைகாட்டுகிறீர்களா? திராவிடர்களிடத்தில் அக்கறை காட்டுகிறீர்களா, யாரிடத்தில் உங்கட்கு அக்கறை என்கிறார்கள். இன்னும் சிலர் ஆரியர்களைப்பிரித்துப் பேசலாமா என்றும் கேட்கின்றனர். நான் 'தமிழர்கள்' என்று சொல்கிற நேரத்தில் திராவிட இனத்தவர், இந்திய மக்கள் என்ற எண்ணத்தை மறந்து, மறுத்துச் சொல்லவில்லை. தமிழ் பேசுகின்ற தமிழ்நாட்டில் வாழ்கின்ற மக்கள், தமிழர், திராவிடர்கள் என்ற பெயரால் குறிப்பிடப்படுகிற தமிழர்கள், மலையாளிகள், தெலுங்கர்கள், கன்னடர்கள். ஆகியோர் திராவிட இனத்தவர். இன்னும் இப்படி இருக்கும்படியான அநேக பிரிவினரையும் இனத்தாரையும் ஒன்றாக இணைத்துக் குறிப்பிடுகிற நேரத்தில், எப்படியோ ஒரே அரசியல் அமைப்பிற்கு உட்படுத்தியிருப்பதால் 'இந்தியர்கள்' என்று குறிப்பிடப்படும் முறையையும் மறந்துவிடவில்லை. தமிழர்கள் என்னும்போது திராவிடர்களுடைய நலனுக்குக் குந்தகம் இல்லாமல், இந்தியர்களுடைய பொது நன்மைக்குக் கேடு இல்லாமல் தமிழ் நாட்டில் தமிழ் பேசும் இனத்தவர்களைக் குறிப்பிடுகிறேன். குடியேறிய தமிழர்கள் இலங்கையில் படுகிற அல்லலை நினைந்து பேசுகின்றேன். இன்றைய தினம் அவர்களுக்கு அங்கேயும் வாழ்வதற்கு வழிவகை இல்லை. இங்கே வந்தால் அவர்களுக்கு வாழ்வளிக்க நமக்கும் வக்கு இல்லை. நமது அரசாங்கத்திடம் அவர்களுக்கு உதவ எவ்வித திட்டமும் இல்லை. அவர்கள் நிலையை மத்திய அரசாங்கத்திடம் வற்புறுத்திச் சொல்லக் கூடிய ஆற்றலும் நமக்கு இல்லை. மத்திய அரசை வற்புறுத்தி இலங்கை அகதிகளுக்கு உதவிசெய்ய இணங்கச் செய்வதற்குத் தக்க விளக்கம் கொடுக்க முடியாத நமது அமைச்சர்கள், அவர்கள் கொடுக்கிற விளக்கத்தை ஏற்றுக்கொண்டு வருகிற நிலைதான்

[Sri K. Anbazhagan] [9th August 1960

இருக்கிறது. 'அகதி' என்ற சொல்லுக்கு எது இலக்கணமோ அதை இலங்கைவாழ் இந்தியர்கள் பெற்றிருக்கவில்லை என்று டெல்லி சர்க்கார் சொன்னவுடன் அதை இவர்கள் ஏற்று வருகிறார்கள் இது மிகமிக வருந்தத்தக்கது. திக்கற்றவர்கள் ஆவதற்கு எது காரணமாக இருந்தாலும் அது, அகதியின் நிலைமைதான். வாழ்வதற்குரிய வழிவகைகளை எல்லாம் இழந்து நிற்பவர்கள் 'அகதிகள்' தான். அப்படிப்பட்ட அகதிகளைப்பற்றி இலங்கையில் அல்லல்படுகிற குடியேறிய தமிழர்களின் நிலையைப்பற்றி—இல்லையானால் திராவிடர்களின் நிலையைப் பற்றி—பொதுவாகச் சொல்ல வேண்டுமானால் அந்த இந்தியர்களின் நிலைமையைப்பற்றி கவர்னருடைய உரையில் எதுவும் காணப்படவில்லை என்று சொன்னால் நமது அமைச்சர்கள் தங்கள் பொறுப்பைத் தட்டிக்கழிக்கிறார்கள், நம்முடைய மக்களுக்குத் துரோகம் விளைவிக்கிறார்கள் என்றுதான் கருதவேண்டியிருக்கிறது. ஆகவே இதுபற்றி இனியாகிலும் அமைச்சர்கள் தங்கள் பொறுப்பை உணர்ந்து தக்க நடவடிக்கை எடுத்துக் கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்து குறிப்பிட விரும்புவது விலைவாசிகளின் உயர்வு பற்றியதாகும். ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்களே பலமுறை விலைவாசியை குறைக்க வழிசெய்ய வேண்டுமென்று வற்புறுத்தியிருக்கிறார்கள். வற்புறுத்தி இருந்தும் இதுவரையில் அந்தப் பிரச்னையில் ஒரு சிறிதளவு முன்னேற்றங்கூட ஏற்படவில்லை. அதைப் பற்றியும் திட்டவட்டமாகக் குறிப்பிடாததோடு, விலைவாசிகளைக் கட்டுப்படுத்துவதற்கு தெளிவான வழிமுறைகள் இருப்பதாகக்கூட சுட்டிக்காட்டப்படவில்லை. குறிப்பாக எதிர்கட்சியினர் ஒருவருக்கொருவர் மாறாக பல விஷயங்களைக் குறிப்பிடுவது வழக்கம். இருப்பினும், இன்றைய தினம் இந்த விலைவாசிகளைக் குறித்து உடனடியாகக் கட்டுப்படுத்தாவிட்டாலும் இதனால் என்ன என்ன தீமை உண்டாகும், மக்கள் எவ்வாறு பாதிக்கப்படுவார்கள் என்பதைப்பற்றி ஆளும் கட்சியைச் சேர்ந்த கனம் அங்கத்தினர் அனந்தநாயகி அம்மையார் பேசியதை அரசாங்கத்திற்கு நினைவூட்டுகிறேன். ஆகவிலைகள் 'விஷம்' என ஏறிக்கொண்டே போகின்றன. இதற்குக் காரணம் காங்கிரஸ் கட்சிதான் என்றால் யாரும் மறுக்க முடியாது. தொடர்ந்து பதிமூன்று வருடங்களாகப் பதவியில் காங்கிரஸார் இருந்து கொண்டே இருக்கிறார்கள். இவர்களுடைய நிர்வாகத்தின் விளைவாக, இன்றைய தினம் பண்டங்களின் விலைகள் ஓரேயடியாக ஏறியுள்ளன. நான் சொல்வதனை அரசாங்கத்தை ஆதரிப்பவர்களே கூட உணர்ந்து எடுத்துச் சொல்கிறார்கள். இதுவரையில் சென்னை அரசாங்கம் இதற்கு எந்தவிதமான நடவடிக்கைகள் எடுத்தார்கள் என்றோ, எடுக்கப்போகிறார்கள் என்றோ தெரிவிக்கவில்லை. மத்திய அரசாங்கம் நடவடிக்கைகள் எடுத்தால்தானே நாங்கள் எடுக்க முடியும் என்று அமைச்சர்கள் சொல்லலாம். மத்திய அரசாங்கம் நடவடிக்கை எடுக்காமல் இருந்தால் மற்ற மாநிலங்கள் பாதிக்கப்படுவதைவிடத் தமிழகம்தான் அதிகமாக பாதிக்கப்படுகிறது. மற்ற மாநிலங்களின் வருவாய், அங்குள்ள மக்களின் வாழ்க்கைத் தரம் ஆகியவை நம்மைவிட உயர்ந்திருக்கிறது. அவர்களுக்குக் கிடைக்கும் பணத்தை வைத்துக்கொண்டு அவர்கள் எப்படியோ,

9th August 1960] [Sri K. Anbazhagan]

தங்களுக்கு வேண்டிய உணவுப் பொருள்களை வாங்கிக்கொள்ளும் சக்தி, நம்மைவிட அவர்களுக்கு, அதிகமாக இருக்கிறது. ஏனெனில், அவர்களின் வருவாய் இன்றையதினம் நம்மைவிட அதிகம். மத்திய மாகாணத்தின் மக்கள் சராசரி வருவாய் நம்மைப் போல் 1-3/4 மடங்கு இருக்கிறது. பம்பாய் மாகாணத்தின் வருவாய் நம்மைப் போல் 1-1/2 மடங்கு இருக்கிறது. அப்படி அங்குள்ள வருவாய் அதிகமாகவிருப்பதால் விலைவாசி உயருகிறபோது அங்கு உள்ள மக்கள் அதிகமாக பாதிக்கப்படுகிறவர்களாக இல்லை. இருந்தபோதிலும், அவர்களும் கூக்குரல் எழுப்புகிறார்கள், போராடவும் தயாராயிருக்கிறார்கள் . இந்நிலையில் இந்த நாட்டு மக்களின் துன்பத்தை உணர்ந்து, இவர்களின் குறைகளைத் தீர்க்க, விலைவாசியைக் குறைப்பதற்கு இந்த அரசாங்கம் இதுவரை என்ன நடவடிக்கை எடுத்தது என்று கேட்கிறேன்.

அரிசி விலை ஒன்றைக் குறைத்தால்கூட நிச்சயமாக நாட்டு மக்கள் ஓரளவு நிம்மதி பெறக்கூடும். அப்படி உணவுப்பண்டங்களில் ஒரு பொருளான அரிசி விலை குறைந்தால்கூட மக்கள் ஓரளவு நிம்மதி பெறுவார்கள் என்று இருக்கும்போது, மத்திய அரசாங்கத்தினிடம் அரிசி இறக்குமதிக்கு அனுமதி கேட்டு, அரசாங்கம் பண உதவி செய்வது மூலம் மக்களுக்கு வேண்டிய அரிசியை நியாயமான விலையில் வழங்க முன்வரவேண்டும். விலைவாசி ஏறினால் விவசாயிகள் நன்மை பெறுவார்கள் என்று கூறுவது, அதிக நிலம் உள்ள விவசாயிகளுக்குத்தான் பொருந்தும். நிலம் இல்லாத விவசாயிகள், கூலிக்காகப் பாடுபட்டு உழைக்கக் கூடிய விவசாயிகளுக்கு இது பொருந்துகிற வாதமல்ல. கூலி வேலை செய்பவர்களாயிருந்தாலும் சரி, தொழிலாளர்களாகயிருந்தாலும் சரி, அல்லது அரசாங்க ஊழியர்களாக இருந்தாலும் சரி, இவர்களுக்கு முதலாவதாகத் தேவைப்படுவது அரிசி. ஆகவே, அரிசி முதலான உணவுப் பண்டங்களின் விலையைக் குறைக்க அரசாங்கம் அக்கறை காட்ட வேண்டும். ஆந்திரம், வங்காளம் போன்ற இடங்களில் அதிகப்படியாகவே அரிசி விளைகின்றது. சென்னை மாநிலத்தைப் பொறுத்த வரையில், மக்களுக்குத் தேவைப்படுகிற இந்த அரிசியின் விலையையாவது குறைத்து மக்களுக்கு வழங்குவதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யவேண்டும். புஞ்சை உணவுத் தானியங்களான கேழ்வரகு, கம்பு போன்றவைகளின் விலையையும் குறைத்துத் தர என்ன வழி என்று சென்னை அரசாங்கம் மத்திய அரசாங்கத்திற்கு எடுக்கச் சொல்லியும் கேட்காவிட்டால் அதற்கு வேண்டிய பணத்தை ஒதுக்கியும் மக்களுக்கு குறைந்த விலையில் கிடைப்பதற்கான ஏற்பாட்டைச் செய்ய வேண்டும். மக்களைப் பட்டினி போட்டு விட்டு பஞ்சத்தின் சாயல் நிலவவிட்டுவிட்டு ஒரு அரசாங்கம் வேறு எந்த வழியில் நல்லமுறையில் ஆட்சி செய்கிறோம் என்று சொன்னாலும் அது சிறந்த ஜனநாயகத்தை ஏற்படுத்துவதற்குத் துணை ஆகாது.

அடுத்து, ஆலைத்துணி விலையைக் குறைப்பதாக இன்றைய தினம் ஒரு அறிவிப்பு வந்திருக்கிறது. மத்திய சர்க்கார் ஏற்பாட்டால் ஆலைத்துணி விலை—பத்து சத விகிதம் குறைகிறது என்றால் அது கைத்தறித் துணிக்குப் போட்டியாக அமையும்.

[Sri K. Anbazhagan] [9th August 1960

தமிழ் நாட்டுக் கைத்தறி நெசவாளர்கள் கண்ணீர் சிந்துவதைப் பற்றி உயர்திரு கந்தசாமி அவர்கள் கூறினர்கள். எனக்கு அவர்களை 'முதலியார்' என்று சேர்த்துச் சொல்ல மனம் வரவில்லை. எந்த 'ஜாதி' இப்பொழுது சுத்தமாக இருக்கிறது என்று எனக்குத் தெரியாத காரணத்தால். ஆகவே ஜாதியைக் குறிப்பிடாமல் பெயரை மட்டும் கூறுகிறேன், உயர்திரு கந்தசாமி அவர்கள், எடுத்துச் சொன்னர்கள், கைத்தறி நெசவாளர்களின் துயர நிலை பற்றி. இன்றைய தினம் ஜவுளி விலை இறங்கினல் கைத்தறி நெசவாளர்களின் கழுத்தில் கை வைத்து நெரிக்கும் நிலைதான் ஏற்படும். அந்நிலை ஏற்படக்கூடாது என்று எண்ணினல் ஜவுளி விலை இறங்கும் வேளையில், கைத்தறிக்கு கொடுக்கப்படுகிற தள்ளுபடியைச் சிறிது அதிகப்படுத்த சர்க்கார் முன் வரவேண்டும், சிறிது காலத்திற்காவது. இரண்டு மாத காலத்திற்காவது இப்படிப்பட்ட நடவடிக்கை எடுத்தால்தான் உடனடியாகக் கைத்தறி நெசவாளர்கள் கண்ணீர் வெள்ளம்போல் பெருகும் நிலை ஏற்படாது தடுக்க முடியும். எனவே இந்தச் சூழ்நிலையை உணர்ந்து சென்னை அரசாங்கம் டில்லி அரசிடம் எடுத்துக் கூறி தக்க நடவடிக்கைகள் எடுக்க வேண்டும்.

அடுத்து, மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தைப் பொறுத்த வரையில் நமது மாநிலப் பங்கு என்ன என்பதை முதலில் தீர்மானிக்க வேண்டும். நமது பங்கைக் கேட்பதில் தவறு இல்லை. அண்ணன், தம்பி ஒற்றுமையாக இருந்தாலும், ஒருவர் வீட்டிற்கு ஒருவர் திருமணம், சீமந்தம் இவைகளுக்குத் தவருது போய் வந்து கொண்டிருந்தாலும் அவர்களிடையே பங்கு பிரிப்பது என்பது பழக்க வழக்கத்திற்கு விரோதமானதல்ல, நீதிக்கும் விரோதமானதல்ல, நியாயமுமாகும். அதே முறையில் சென்னை மாநிலத்தைப் பொறுத்த வரையில், மத்திய அரசிடம் நமது பங்கு என்னவென்று பேசி அதற்கு உட்படக்கூடிய திட்டங்கள் இன்னின்னவென்று தீர்மானிக்க வேண்டுமே தவிர நம் பங்கைக்கூட அவர்களே தீர்மானிப்பார்கள், திட்டம் தீட்டுகிறவர்கள் இன்னின்ன செய்ய வேண்டுமென்று நமக்குச் சொல்வார்கள் என்ருல், நமது பங்கு அறுதியிடப்படவில்லை உரிமை ஏற்கப்படவில்லை என்றுதான் கொள்ள வேண்டும். அதுகாறும், தூத்துக்குடி துறைமுகம் விரிவாக்கப்பட வேண்டுமென்று கேட்டால், அல்லது அதைப் புதுப்பிக்க வேண்டுமென்று சொன்னல் அதைச் செய்வதற்கில்லை என்று மறுப்பதற்கு அவர்கள் காரண காரியம் காட்ட முடியும். சேதுசமுத்திரத் திட்டம் பற்றிக் கேட்டால், அதை மறுப்பதற்கும் அவர்கள் காரணம் காட்ட முடியும், நிதி வசதியில்லை என்று கூறி—சேதுசமுத்திரத் திட்டத்திற்கு பணமில்லை என்று சொன்னல், நமக்கு ஒதுக்கியிருக்கக்கூடிய தொகை ஒதுக்க வேண்டிய தொகை இவ்வளவு என்று தெரிந்தால், நாம் தூத்துக்குடித் துறைமுக அபிவிருத்திக்கு முதலிடமும், சேது சமுத்திரத் திட்டத்திற்கு இரண்டாவது இடமும் கொடுத்து திட்டங்களை நம் விருப்பம் போல் தீட்ட முடியும். வட நாட்டு அமைச்சர்களை விட நம் அமைச்சர்களைத் தான் நாம் நம்ப

முடியும், நம்ப வேண்டும். நம் நாட்டிலே பிறந்து, நம்மோடு வாழ்கிறவர்கள் என்றிருக்கும்போது நமது மாநில அமைச்சர்களை நாம் நம்ப வேண்டுமே தவிர வேறு யாரையும் இந்த அளவு நம்புவதற்கில்லை.

எனவே, நமது பங்கு என்ன என்பதை நமது அமைச்சர்கள் அறுதியிட்டு தீர்மானித்து உரிமை பெற வேண்டும். மற்ற மாநில அரசாங்கங்கள் தங்களால் நிறைவேற்ற முடிந்ததை விட அதிகமாக தொகை ஒதுக்கக் கேட்டிருக்கிறார்கள். ஆனால் கனம் சுப்பிரமணியம் அவர்கள் மூன்றாவது திட்டத்தில் தங்களால் முடிந்ததைவிடக் குறைவாக நிதி கேட்டிருக்கிறார்கள். இதை ஒரு குற்றச்சாட்டாகக் கூறுகிறேன். நாம் நேற்று வரை திட்டங்களை நிறைவேற்ற வேண்டும், அதற்கு என்ன செலவாகும் என்று கணக்கிட்டுப் பார்த்துக் கேட்க வேண்டும். இரண்டாவது திட்டத்திற்கு என்ன செலவு செய்தோம், நாம் இன்று என்னென்ன ஐந்தாண்டுத் திட்டத்தில் நமக்கு கிடைத்த தொகை எவ்வளவு? நேற்று நமது அரசாங்கத்தால் நிறைவேற்ற முடிந்ததுதான் இன்றும் முடியும் என்ற அடிப்படையில் கேட்க ஆரம்பிக்கக் கூடாது. நமக்கு இவ்வளவு தேவை என்றால் அதை அவர்கள் அப்படியே ஒப்புக்கொள்ள மாட்டார்கள் என்பது எல்லோரும் அறிந்ததே. நமக்குள்ள நியாயமான பங்கைக் கேட்க வேண்டும். முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் நமக்குக் கிடைக்க வேண்டிய பங்கு கிடைக்கவில்லை என்ற கூக்குரல் நாடெங்கும் எழுந்தது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலும் ஏமாற்றப்பட்டிருக்கிறோம் என்ற குறை மக்கள் மனதில் குமுறுகிறது. நமக்குக் கிடைக்கவேண்டிய பங்கு இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களிலும் கிடைக்கவில்லை, என்றிருக்கும்போது அந்தப் பங்கையும் சேர்த்து இப்பொழுது கேட்பதில் என்ன தவறு இருக்கிறது? அப்படிக் கேட்காவிட்டாலும், இன்றைய மாநில மக்கள் தொகை என்ன, மக்களின் சராசரி வருமானம் எவ்வளவு, நமது மக்கள் சராசரி வருமானம் மற்ற மாநில மக்களின் வருமானத்தைவிட குறைவாகயிருந்தால் அதை நிறைவு செய்ய எவ்வளவு தொகை வேண்டுமென்று நாம் கேட்டிருக்க வேண்டும். 280 கோடி அளவு மூன்றாவது ஐந்தாண்டு திட்டத்தில் நம் மாநிலத்திற்குக் கேட்கலாம் என்று குறிப்புக் காட்டினார் நிதி அமைச்சர். திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் அறிஞர் அண்ணாத்துரை அவர்கள், ஆலோசனை கேட்கப்பட்ட காரணத்தினால் சொன்னார்கள், ஆயிரம் கோடி ரூபாய் கேளுங்கள், அதற்குத் திட்டங்கள் இவை என்று. அண்ணாதுரை அவர்களுக்குப் பொருளாதாரம் தெரியுமா, என்றனர். அவர் பொருளாதார நிபுணர் அல்ல. அவருக்கு அரசியல் தெரியுமா என்றனர். அமைச்சர்களுக்குத் தெரிந்த அரசியல் அவருக்குத் தெரியாது. திட்டத்தினைப் பற்றிப்புரிந்துக் கொண்டுதான் இவர் ஆயிரம் கோடி கேட்டாரா என்றெல்லாம் கேலி செய்தார்கள். யார், எப்பொழுது, எங்கே சொன்னார்கள் என்பதைப் பற்றி எனக்கு அக்கரையில்லை. அண்ணா அவர்கள் 1,000 கோடிக்குத் திட்டமிட்டால்தான் இந்த திட்டங்களில் பெரும் அளவான திட்டங்கள் நிறைவேறி நம் நாட்டு மக்கள் துன்பம் நீங்கும் என்று, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஆயிரம்

[Sri K. Anbazhagan] [9th August 1960

கோடி அளவுக்குக் கேட்க வேண்டும் என்று சொன்னார்கள். அது தவறில்லை என்பதற்கு மட்டுமின்றி நியாயமே என்பதற்கு சென்னை மாநில சர்க்கார் தங்களுக்கு பொருளாதாரத் துறையில் ஆலோசனை தெரிவித்து, இந்நாட்டுத் தொழில் துறையை வளப் படுத்தவேண்டுமென்ற நோக்குடன் உயர்திரு. லோகநாதன் அவர்கள் தலைமையில் நிபுணர்கள் கொண்ட ஒரு குழு அமைத்து ஆலோசனை கேட்டிருந்தார்கள். அறிஞர் அண்ணாத்துரை பொரு ளாதாரம் தெரியாதவர் என்று கூறினாலும், திராவிட முன்னேற்றக் கழகத்திற்கு நல்லெண்ணம் இல்லையென்று சொன்னாலும், நிபுணர் லோகநாதன் அவர்கள் தெரிவித்திருக்கும் ஆலோசனை என்ன? அறிஞர் அண்ணாத்துரை கேட்டது 1,000 கோடி அளவு. ஆனால் டாக்டர் லோகநாதன் அவர்கள் திட்டத் தின்படி எவ்வளவு? இரண்டு ஐந்தாண்டுத் திட்டத்திற்கும் சேர்த்து, 10 ஆண்டுகளுக்கு, எவ்வளவு கோடி ரூபாய்க்குத் திட்டங்கள் திட்டினால், எத்தனை கோடி ரூபாய் தொழில் துறை யில் மூலதனம் இட முன்வந்தால் இந்த நாடு வாழும் வளரும் என்று சொல்லும்போது, 10 ஆண்டுகளுக்கு 2,000 கோடி அள விற்கு இந்த நாட்டில் திட்டம் இட வேண்டுமென்று சொல்லியிருக் கிறார்கள். இது, நிபுணர்கள் போட்ட திட்டத்தின்படி தரப்படும் கணக்கு. 15 ஆண்டுகளுக்குத்தான் 2,000 கோடி என்கிறார் நிதி அமைச்சர். 1962-ம் ஆண்டிலிருந்து 1972-ம் ஆண்டு வரையில் செய்யவேண்டியது பற்றித்தான் பல குறிப்புகள் கொடுத்திருக் கிறார்கள் என்பது என் நினைவு. 15 ஆண்டுகளுக்குத்தான் 2,000 கோடி என்றாலும் ஏறத்தாழ 650 கோடிக்காவது இந்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் கேட்க நாம் கடமைப்பட்டிருக்கிறோம். அண்ணா அவர்கள் சொன்ன திட்டத்தை முழுவதும் ஒப்புக் கொள்ள வேண்டுமென்று வற்புறுத்த யாருக்கும் உரிமையில்லை. ஆனால் அவர் கூறியதன் நோக்கத்தை ஏற்றுக் கொண்டிருக் கலாம். அதன் அடிப்படையில் அமைச்சர் அவர்கள் 650 அல்லது 700 கோடி ரூபாய் கேட்டிருக்கலாம். இப்பொழுதும் கேட்க முன் வரலாம். நிதி அமைச்சர் சுப்பிரமணியம் அவர்கள் முன்பு ஒரு முறை திராவிட முன்னேற்றக் கழகத்திற்குப் பதில் சொல்வதாக நினைத்துச் சொன்னார்கள், "இன்னொரு பத்து வருடங்கள் கிளர்ச்சியை நிறுத்திக் கொள்ளுங்கள், திராவிட நாட்டுப் பிரச்னையை ஒத்தி வையுங்கள், பத்து ஆண்டுகளில் இந்த நாடு முன்னேறுவதற்கு திட்டமிட்டு வழி வகுப்பேன், தொழில் துறை யில் நம் மாநிலம் முன்னேறுவதற்கு தேவையான நிதியை மத்திய அரசாங்கத்தினிடம் கேட்பேன், இதற்காகவாவது திராவிட நாடு பிரிவினையை ஒத்தி வையுங்கள்" என்று சொன்னார் கள். அந்த வாதம் உண்மையாகயிருந்தால், இப்பொழுது 650 கோடி ரூபாய் அளவு கேட்பதற்காவது அமைச்சர் அவர்கள் முன் வர வேண்டும். 650 கோடி கிடைக்கவில்லை, 600 கோடிதான் கிடைத்தது என்றால்கூட அதற்காக நான் வருத்தப்பட மாட்டேன். ஆனால் அம்மா தாயே, சோறு போடு என்றுகூடக் கேட்காது 'கஞ்சி ஊற்று தாயே' என்று கேட்டு சோறும் இல்லை, கஞ்சியும் இல்லை என்ற பதில் கிடைத்தால் என்ன கதியாவது? என்றுதான் வேதனைப்படுகிறேன். அடுத்து தூத்துக்குடி துறை முகத் திட்டம் ஒரு வேளை நிறைவேற்றினாலும் நிறைவேறும், நிறை

9th August 1960] [Sri K. Anbazhagan]

வேறாது போனாலும் போகும்; சேதுசமுத்திரத் திட்டம் காகிதத்தில் இருக்கிற திட்டம், சேலம் இரும்பு உருக்குத் தொழிற்சாலை மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இனி சேர்க்கப்படக் கூடும், என்றிருக்கும் ஐயநிலை எவ்வளவு வெட்கப்படத் தக்கது, எவ்வளவு வருந்தத் தக்கது என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும். இது, தமிழர்களைப் பஞ்சைகளாக ஆக்குகிற வழியாகும். வட நாட்டு ஆட்சி வஞ்சிக்கிறது என்பதை ஏற்றுக் கொள்ளாத இந்த அரசாங்கம் தாங்களேதான் வஞ்சிக்க வழி வகுக்கிறார்கள் தடுக்கவகையின்றி என்பதை ஒப்புக் கொள்ள வேண்டும். இன்றைய வாட்டமான நிலையை மாற்றினால்தான் இந்த நாடு வாழ முடியும். நம் நாடு நலம் பெறுவதற்குரிய வழி குறித்து கவர்னர் உரையில் ஒன்றும் தெரிவிக்கவில்லை. இந்நிலையில் நம் நாடு எப்படி வாழும் என்று எண்ணிப்பார்க்கும்போது, நன்றி தெரிவிக்க வேண்டுமென்று விரும்பினாலும்கூட, வருத்தத்தையும் கண்டனத்தையும் தெரிவிக்க வேண்டியவர்களாக இருக்கிறோம். அதுமட்டுமல்லாமல், அணுசக்தி மின்சார உற்பத்தி உலையை நம் நாட்டிலேயே, தமிழகத்தில் ஏற்படுத்துவதற்கு முன்வர வேண்டும். இதில் நம்முடைய மின்சார அமைச்சர் அவர்கள் கவனமாக இல்லை என்று கருதுகிறேன். பொதுவாக மின்சார அமைச்சர் அவர்களை ஆளும் கட்சியினர் அதிகமாகப் பாராட்டுகிறார்கள். அதன் காரணமாகத்தான் இவர் தன் கடமையை மறந்து விடுகிறார் என்று நினைக்கிறேன். அணுசக்தி உலை மூலம் மின்சார உற்பத்தி ஏற்படுத்துவதில்கூட வட நாட்டில் ஏற்படுத்திய பின்னால் அதை நம் நாட்டில் கொண்டு வந்தால் போதும் என்று இருக்காமல் நம் மாநிலத்திலேயே முதன் முதலாக கொண்டு வருவதற்கு வேண்டிய வழிவகைகளை எடுத்துக்கூறி, அதை ஏற்படுத்துவதற்கு அமைச்சர் அவர்கள் வாதாட வேண்டும் என்று கேட்டுக்கொண்டு என்னுடைய உரையை முடித்துக் கொள்கிறேன்.

DEPUTY SPEAKER: The House will now adjourn and meet again at 8–30 a.m. to-morrow. 1-30 p.m.

The House then adjourned.

**IX.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.**

A. STATUTORY RULES AND ORDERS.

* 70. *Notification under section 22 of the Madras Estates (Abolition and Conversion into Ryotwari) Act*, 1948, *regarding the Ryotwari Settlement of Estates in Chingleput district other than Kachinad Estate issued with Memorandum No.* 24415-J3/60-3, *Revenue, dated 2nd May* 1960. [Laid on the table of the House under section 67 (4) of the Madras Estates (Abolition and Conversion into Ryotwari) Act, 1948 (Madras Act XXVI of 1948.]

* 71. *Notification under section 22 of the Madras Estates (Abolition and Conversion into Ryotwari) Act*, 1948, *regarding the Ryotwari Settlement of Estates in Thanjavur district other than*